பெண்மை —
மனங்கவரும்,
மதிமயக்கும்.
துள்ளு
நடைபோடும்
ஒருகணம்,
துவண்டு தடுமாறும்
மறுகணம்.
பெண்மையின்
பல எண்ணங்களின்
குவியலே
'மெஃப்ரின்'




# மெஃப்ரின்

'மெஃபரின்' லுங்கி அணிந்த
மங்கையர் புதியதோர்
கோலம் படைத்துள்ளனர்!

'மெஃப்ரின்' பாலியெஸ்டர்
இழைகலந்த உடுப்புத்
துணிகள் — கேம்ப்ரிக்குகள்,
லானகள், பாப்ளின்கள்;
இளம் சாயல்களில்,
எடுப்பான வண்ணங்களில்,
பெருமிதப் பிரிண்டுகளில்
'மெஃபரின்' 100%
பாலியெஸ்டர் சேலைகள்,
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் சேலைகள்.

தவிர, அதி நவீனமான அரும்பெரும்
அழகு வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும்,
'டெரோஸெல்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
ஷர்ட்டிங்குகள்; இன்னெளி
மிளிரும் வண்ணங்களிலே,
வரிகளிலே, கட்டங்களிலே
'எஸ்டர்காட்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
சூட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**

AIYARS-M.317.TM

# கல்கி

## பொருளடக்கம்

பரிதாபி, மாசிமீ 28

மார்ச 11, 1973

வளர்ச்சியைத் தடுக்கும் வரிச் சுமை — 3
தமிழ் நாட்டிலே... — 6
அருள் வாக்கு — 9
அலை ஓசை — 11
அரங்கேற்றம் (திரைப்பட விமரிசனம்) — 21
ராஜாஜியின் ஜெயில் டைரி — 23
கதை அரங்கு கண்டோம்! — 25
மூன்று முடிச்சுக்கள் — 27
ஜாங்கோ ஜக்கு (சித்திரத் தொடர்) — 36
மன்னிப்பு உண்டா? — 38
சிதம்பர 'ரகசியம்' — 44
மெய்யான வழியர் மொய்விதரன் — 49
சத்திய வெள்ளம் — 51
இரட்டை வேடப் படங்கள் இரண்டு — 59
'ஸ்வீட் ஸ்டால்' காந்தி சிரிக்கிறார்! — 60
இலக்கிய மலர்கள் — 67
விஷக்கடி வேளை — 70



'கல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

கல்கி மலர் 32 இதழ் 32



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# வளர்ச்சியைத் தடுக்கும் வரிச்சுமை

க. சந்தானம்

விளைவுகளைச் சிந்திக்காமல் வரிகளை ஆண்டுதோறும் அடுக்கிக் கொண்டே போவது காங்கிரஸ் நிதி அமைச்சர்களின் லட்சணம் என்று ஆகிவிட்டது. திரு சவான் இவ்வாண்டு இந்த வகையில் தம்மையே மிஞ்சிவிட்டார்.

1973 — 74 ஆண்டுக்கு ரூ. 335 கோடி வருமானத்தில் துண்டு விழும் என்று மதிப்பீடு செய்து, அதை அப்படியே விட்டுவிட்டால் பணப் புழக்கம் அதிகரித்து விலைவாசிகள் உயருமாகையால் அதைப் பூர்த்தி செய்யச் சுமார் ரூ. 300 கோடிக்குப் புது வரிகளை அவர் விதித்துள்ளார். செலவுகளை அதிகரித்துக் காட்ட, இனி ஏற்படக்கூடும் என்று எதிர்பார்க்கும் வெள்ளம், புயல், மழையின்மை போன்ற நிவாரணங்களுக்காக ரூ. 100 கோடியும், ஐந்தாவது திட்டத்துக்கு முன்ஏற்பாடாக அடுத்த ஆண்டில் செலவழிக்க ரூ. 150 கோடியும் செலவினங்களில் நிதி ஒதுக்கியுள்ளார் அமைச்சர். நான்காவது திட்டத்தின் கடைசி ஆண்டான 73 — 74க்கு செலவழிக்கப்படவேண்டிய தொகையே கணிசமாக இருக்க ஐந்தாவது திட்டத்துக்கு இப்போதே முன் ஏற்பாடாக நிதி ஒதுக்க வேண்டிய அவசியம் என்ன என்று புரியவில்லை. இந்த இரண்டு செலவினங்களும் இல்லையென்றால் புது வரிகள் விதிப்பதற்கு அவசியமே இருக்காது! இதுவே திரு சவானின் கடைசி பட்ஜெட்டாக இருக்கும் என்று எதிர்பார்ப்போம்!

முற்றிலும் அவசியமில்லாத இந்தப் புதுச் செலவினங்களைத் தவிர, இதரமாமூல் செலவுகளைக் குறைக்க முடியாது என்றும் அமைச்சர் கருதுவதாலேயே பற்றுக்குறை ஏற்பட்டிருக்கிறது. உதாரணமாக 1972 — 73 ஆண்டுக்குப் பாதுகாப்புச் செலவில் ரூ. 192 கோடி அதிகரித்திருக்கிறது. இதற்கு ஒருவாறு பாகிஸ்தான் போரின் விளைவு காரணம் என்று ஏற்றுக்கொண்டாலும், 1973-74 ஆண்டுக்குப் பாதுகாப்புச் செலவை ரூ. 1600 கோடி அளவிலேயே வைத்திருக்க என்ன அவசியம் என்று கேட்கவே தோன்றும். பாகிஸ்தானுக்கு எதிராகவா இந்தப் பலத்த ஏற்பாடுகள்? இதில் ரூ. 300 கோடி குறைத்தாலே மத்திய அரசாங்கத்தின் வரவு — செலவு கணக்கு வரி இல்லாமலே சரிக்கட்டிப் போயிருக்கும்! சுதந்திர இந்தியா கண்ட நிதி அமைச்சர்களில் திரு சவான் உண்மையிலேயே வரி சுமத்தும் வெறியர்.

தொழிலதிபர்களையும் வர்த்தகர்களையும் விலைவாசி ஏறுது பார்த்துக்கொள்ள வேண்டும் என்று எப்போதும் போல அரசாங்கம் எச்சரிக்கை விடுத்திருக்கிறது. ஆனால் அதிகார வர்க்கத்தின் ஆதிக்கம் நாட்டுப் பொருளாதாரத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் வியாபித்திருக்கும் நிலையில், விலை உயர்வு ஏற்படாமல் இருக்குமா என்பது சந்தேகம்தான். வளர்ச்சியும் சமூக நீதியும் ஓங்கும் வண்ணம் பட்ஜெட் தயாரிக்கப் பட்டுள்ளது என்று கருதுகிறார் திரு சவான். ஆனால் இந்த ஆண்டில் எதிர்பார்க்கப்படும் 7 சதவிகித வளர்ச்சி கூட அடுத்த ஆண்டில் ஏற்படாது. நிச்சயமாகக் குறைந்துதான் போகும். நாட்டில் கிடைக்காத பொருள்கள் மட்டுமே இப்போது இறக்குமதி செய்யப்படுகின்றன. ஏற்கனவே அனுமதித்துள்ள தொழில்களுக்கு அவசியமானவை என்றுதான் இறக்குமதியும் அனுமதிக்கப்பட்டுள்ளது. இப்போது இவற்றின் மீதுள்ள சுங்க வரிகளை மேலும் உயர்த்துவதால், தொழில்களின் முதலீட்டுச் செலவும், உற்பத்தி விலையும் எல்லா மட்டங்களிலும் உயரத்தானே செய்யும்! விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்குப் பதிலாக, நாட்டில் பணவீக்கமும் விலை ஏற்றமும் நிர்ந்தரமாக்கப்பட்டு விட்டன. இதைத்தான் திரு சவானின் பட்ஜெட் சாதிக்க முற்படுகிறது.

புது வேலைவாய்ப்புக்களை உண்டாக்க நூறு கோடி ரூபாய் நிதி ஒதுக்கியிருக்கிறார் அமைச்சர். ஆனால் எஃகுப் பொருள்கள், இரும்பு எஃகு வகைகள், மின்சார சாதனங்கள் முதலிய பல பொருள்கள் மீது விதிக்கப்படும் சுங்க வரிகளும், உற்பத்தி வரிகளும் தொழில் துறையிலும், பொதுவாகக் கட்டடக் கட்டுமானத் துறையிலும், வேலை கணக்கத்தையே உண்டாக்கும். புது வேலை

அவனை நினைத்துக் கொண்டு...

வாய்ப்புக்கள் உண்டாவதை விட இதன் மூலம் ஏற்படக் கூடிய வேலை இழப்பும், ஆட்குறைப்பும் அதிகமாகவே இருக்கும். சிகரெட்டுகள், குளிர்பெட்டிகள்போன்ற ஆடம்பரப் பொருள்கள் மீது விதிக்கப் பட்டுள்ள வரிகளைப் பற்றிக் குறை கூற முடியாமலிருந்தாலும், மத்தியதர வர்க் கத்தினரின் வாழ்க்கையைக் கஷ்டமாக ஆக்கும். மத்தியதர வர்க்கத்தினரின் வாழ்க்கையை மேலும் கடினமாக்கு வதன் மூலம் சமூக நீதியைப் பரப்புவ தாகச் சொல்வது என்ன புத்திசாலித் தனமோ? ஏழை மக்களின் வாழ்க்கை யைச் சுலபமாக்க, அவர்களின் சுமை யைக் குறைக்க, திரு சவானின் பட் ஜெட்டில் ஓர் அம்சம்கூட இல்லை.

நேர்முக வரி வகையில் முதல் தடவை யாக விவசாய வருமானத்தை இதர வருமானத்துடன் இணைத்து வரி விதிக்க அரைகுறை ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. இதனால் எவ்வளவு வரு மானம் அரசாங்கத்துக்கு நிகராகக் கிடைக்கும் என்பது போகப் போகத் தான் தெரியும். வருமானத்தைச் சேக ரிக்க அரசு செய்யும் செலவு, வருமானம் முழுவதையும் கூடச் சாப்பிட்டு விடக் கூடும். மேலும், நிலச் சீர்திருத்தங் களும், உச்சவரம்பும் விரிவாக அமுலாக் கப்பட்டுள்ள நிலைமையில், அதிக நிலம் வைத்துக் கொண்டுள்ள அசடுகள் மிகச் சிலரே இருப்பார்கள். பெரும்பான்மை யான சிறு விஸ்தீரணமுள்ள நிலங்களி லிருந்து கிடைக்கும் வருமானம் மிகச் சொற்பமாகவே இருக்கும். ஆகவே, விவசாய வருமானத்தையும் வரிவிதிப்பு வலையில் கொண்டுவர வேண்டுமானால் விவசாய வருமானத்திலும் ஓரளவுக்கு, சுமார் 2500 ரூபாய்க்கு, விலக்கு அளித்துவிட்டு, அதற்கு உபரியாக உள்ள வருமானத்தை மட்டும், இதர வருமானத்துடன் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று இருப்பதுதான் முறை. இப்போதுள்ள முறையில் மிகக் குறைந்த விவசாய வருமானம் உள்ள வர்களும் கணக்கு வைத்துக் காட்ட வேண்டும். ஆனால் தில்லி தர்பாரில் அமர்ந்துள்ள அதிகாரிகளுக்கும் அமைச் சர்களுக்கும் தங்களுடைய விதிமுறைகள் என்னென்ன விளைவுகளை உண்டாக்கி யுள்ளன என்பது தெரியவே தெரியாது. முன்பு செலவு வரி, கொஞ்ச காலம் அமுலிலிருந்து பிறகு எடுபட்டுப்போனது போல் இந்த விவசாய வருமான இணைப் பும், விரைவில் மறைந்து போகக்கூடும்.

பசியாலும் வறுமையாலும் மக்கள் வாடுகின்றனர். இந்த நிலைமையை மாற்ற வேண்டும் என்று திரு சவான் பட்ஜெட் உரையில் விருப்புடன் கூறி யுள்ளார். ஆனால் முப்பத்தைந்து பைசா வாகக் குறைந்துள்ள ரூபாயின் மதிப்பை இந்த ஆண்டு பட்ஜெட் மேலும் கணிச மாகக் குறைக்கும்! சோஷலிச சமுதா யத்தை நோக்கி முன்னேறும் லட்சணம் இதுதான்!

# வரி போடாத வள்ளல்!

தமிழ் நாட்டின் 1973 — 74 ஆண்டு பட்ஜெட்டில் புது வரிகள் இல்லாமல் போன தற்கு இரண்டு காரணங்கள். முதலாவது மத்திய அரசாங்கம். 1972 — 73 ஆண்டுக்கு ரூ. 129 கோடியும் 1973 — 74 ஆண்டுக்கு சுமார் 151 கோடி ரூபாயும் தமிழ் நாட்டுக்கு ஒதுக்கியிருக்கிறது. 1973 — 74 ஆண்டுக்கு, முந்திய ஆண்டை விட சுமார் 22 கோடி ரூபாய் அதிகமாகக் கொடுக்கப் போகிறது. இந்த அதிக வருமானம் தமிழ் நாடு வரி இல்லாமல் பட்ஜெட் தயாரிப்ப தற்கு ஒரு காரணம்.

மற்றொரு காரணம், தமிழ் நாட்டு மக்கள் கள்ளும் சாராயமும் மது வகைகளும் குடித்துத் தமிழக அரசுக்கு அளித்துள்ள கலால் வருமானம். 1973 — 74 ஆண்டுக்கு இதன் மூலம் ரூ. 45 கோடி கிடைக்கும் என்று மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. இது முந்தைய ஆண்டைவிட 5 கோடி ரூபாய் அதிகமாகும். கலால் வருமானத்தைப் போல இரு மடங்கு செலவு செய்து கள்ளும் சாராயமும் மதுவும் உட்கொள்ளப்படுகிறது என்றும், இதில் மூன்றில் இரண்டு பங்கு ஏழை எளியோர்களால் குடிக்கப்படுகிறது என்றும் குறைத்து மதிப்பீடு செய்தாலும் கூட, மதுவகைக்கு ஏழை மக்கள் செலவு செய்வது சுமார் ரூ. 60 கோடியாகும். தமிழ்நாட்டு அரசாங்கத்தின் திருப்திகரமான பட்ஜெட் வருமானத்துக்கு, தமிழ்நாட்டு ஏழை மக்கள் மற்றொரு காரணம் என்பதை எண்ணும்போது வேதனைப் படாமல் இருக்க முடியவில்லை. அரசாங்கம் மக்கள் நலனுக்குச் செலவிடும் இனங்களைக் காட்டிலும் ஏழைகள் மதுவகைக்குச் செலவிடும் தொகை அதிகமாகவே இருக்கும். சாதனைகளைப்பற்றி நாடறிய அரசாங்கம் பறைசாற்றிக் கொள்ளும்போது கலால் வருமான உயர்வு உணர்த்தும் கொடுமையையும் பக்கத்தில் வைத்துப் பார்த்தால் உண்மை முன்னேற்றம் எந்த அளவுக்கு ஏற்பட்டுள்ளது என்பது புரியும்.

# தமிழ் நாட்டிலே... —தீரன்

## மார்ச் மாதம் 15ந் தேதி

கரூரில் நடைபெற்ற ஸ்தாபன காங்கிரஸ் மகாநாட்டில் மார்ச் 15ந் தேதி ஆர்ப்பாட்டத்துக்கு அறிவிப்புக் கொடுத்திருக்கிறார்கள். தமிழக அரசின் போக்கை எதிர்த்து மக்கள் உரிமைப் பாதுகாப்பு நாளாக மார்ச் 15ந் தேதி அறிவிக்கப்பட்டிருக்கிறது. தமிழ் நாடு அரசு உத்தேசித்திருக்கும் ஊழல் விசாரணை மசோதாவை வாபஸ் பெறக் கோரியும், திண்டுக்கல் உப தேர்தலைத் தேர்தல் கமிஷனின் நேர் பார்வையில் நடத்தக் கோரியும், கடும் விலைவாசிகளைத் தடுக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு மத்திய மாநில அரசுகளை வேண்டியும் இம்மகாநாட்டில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. மின்சார வெட்டு, வேலையில்லாத் திண்டாட்டம், விலைவாசி உயர்வு ஆகியவற்றுக்குக் காரணமாகத் தி. மு. க. அரசைக் குற்றம் சாட்டிய இந்த மகாநாடு அங்கங்கே மாணவர்கள் மீது போடப்பட்டுள்ள பொய் வழக்குகளை வாபஸ் பெறுமாறு அரசைக் கோரியிருக்கிறது.

மார்ச் 15ந் தேதி ஜில்லா, தாலுகா அலுவலகங்களின் முன் நடத்தப் போகும் 'மக்கள் உரிமை தின' ஆர்ப்பாட்டம் காந்திய வழியில் இருக்க வேண்டும் என்பதைத் திரு காமராஜ் அவர்கள் தம்முடைய பேருரையில் குறிப்பிட்டிருக்கிறார். ஊழல் விசாரணை மசோதாவைக் கொண்டு வருவதன் மூலம் கருணாநிதி பிரச்னைகளைத் திசை திருப்ப முயலக்கூடாது என்றும் அவர் கூறியிருக்கிறார்.

மார்ச் 15ந் தேதி நடைபெற விருக்கும் இந்தப் போராட்டத்தில் தனது தோழமைக் கட்சிகளாகிய சுதந்திரா, உழைப்பாளர் பொதுநலக் கட்சி, சோஷலிஸ்ட், தமிழரசுக் கட்சி ஆகியவற்றையும் கலந்து கொள்ளுமாறு ஸ்தாபன காங்கிரஸ் அழைத்திருக்கிறது.

## 71 பக்கத் தீர்ப்பு

திரு மதியழகன் செலுத்தியிருந்த ரிட் மனுக்களைத் தள்ளுபடி செய்து சென்னை உயர் நீதிமன்ற 'ஃபுல் பெஞ்ச்' 71 பக்கத்தில் தீர்ப்புக் கூறியிருக்கிறது. அந்த 71 பக்கத் தீர்ப்பின் ஒரு பகுதியில் நீதிபதிகள் கூறியது பின்வருமாறு:

'கோர்ட் வரம்புக்கு உட்படாதிருக்கத் தமக்கு உரிமை இருப்பதாகத் துணை சபா நாயகர் திரு சீனிவாசன் வாதித்திருக்கிறார். அன்று சபை அலுவல்களை அவர் நடத்தியதால் கோர்ட்டுக்கு அவர் உதவியளித்திருக்க முடியும். குறிப்பிட்ட நிலையில் தமக்கு மட்டும் தெரிந்த விவரத்தை வெளியிட்டுக் கோர்ட்டுக்கு உதவுவது சமூகத்துக்கும், குறிப்பாக அரசுக்கும் நல்லது. துரதிர்ஷ்டவசமாக அது செய்யப்படவில்லை. உதவி சபாநாயகரைப் போலவே சட்டசபைக் காரியதரிசியும் அத்தகைய உரிமை கொண்டாடியது வியப்பளிப்பதாகவும், அவர் தம் கடமையைச் செய்யும் போது சபை அலுவல்களை ஒழுங்குபடுத்த அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் அதிகாரங்களை அவர் பயன்படுத்துவதாகக் கூற முடியாது என்றும் நீதிபதிகள் கூறியுள்ளனர்.

இந்தத் தீர்ப்பை அடுத்துத் தமிழ் நாடு சட்டசபையின் துணை சபாநாயகரும், செயலாளரும் உடனடியாகப் பதவி விலக வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் சட்டசபையில்




ஒழுங்குப் பிரச்னைகளை எழுப்பி விவாதித் திருக்கிறார்கள்.

## ‘ஊழல்’ கமிட்டி பகிஷ்காரம்

தமிழக அரசின் ஊழல் விசாரணை மசோதா பற்றிய பரிசீலனைக் குழுவின் முதல் கூட்டத்தி லேயே எதிர்க் கட்சிகள் அதைப்பகிஷ்கரித்து வெளிநடப்புச் செய்து விட்டன. ‘‘பொது வாழ்வில் ஈடுபட்டிருப்போர் மீது கூறப்படும் லஞ்ச ஊழல் புகார்கள் குறித்து விசாரணை நடத்த விசாரணைக் கமிஷன் நியமிக்க வகை செய்யும்’’ என்று சொல்லப்படுகிற இந்த மசோதா, ‘‘தமிழ் நாடு அரசின் மீது தற் போது கூறப்படுகிற குற்றச்சாட்டுக்கள், புகார்கள் ஆகியவற்றிலிருந்து மக்கள் கவ னத்தைத் திசை திருப்பும் நோக்கத்துடனே கொண்டு வரப்படுகிறது’’ என்று எதிர்க் கட்சிகள் இம் மசோதாவைப் பற்றி விமரி சித்துள்ளன.

‘‘ஏற்கனவே 1952ம் ஆண்டிலேயே லோக சபையில் நிறைவேற்றிய ‘விசாரணைக் கமிஷன் சட்ட’ அடிப்படையில் குறிப்பிட்ட புகார்கள் கூறப்படும்போது மாநில அரசு விசாரணைக் கமிஷன் அமைக்க வழி வகை இருக்கிறது. அமைச்சர்கள் உள்ளிட்ட பொது வாழ்வில் ஈடுபட்டிருப்போர் மீது அந்தச் சட்டத்தின் அடிப்படையிலேயே விசாரணை நடத்தலாம். அதுவும் தவிர இந்தியன் பீனல் கோடு விதிகளின்படி பொய்யான அல்லது அவதூறான புகார் கொடுப்போர் மீது வழக் குத் தொடரவும் நடவடிக்கைகள் எடுக்கவும் வழி வகைகள் உள்ளன. அப்படி இருக்கும் போது தமிழக அரசு கொண்டு வந்துள்ள புதிய மசோதாவின்படி புகார் அல்லது குற்றச்சாட்டுக்களைக் கூறுகிறவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும் என்று சொல்லியிருப்பது பயமுறுத்தல் ஆகும். மேலும் குற்றம் சாட்டுவதற்குக் கால வரையறை நிர்ணயித்திருப்பது கிரிமினல் சட்ட வரலாற்றுக்கே முரணானது ஆகும். சட்டப் புத்தகத்தில் இடம் பெறவே லாயக் கற்றது இம்மசோதா. நியாயமான புகார்கள் அல்லது குற்றச்சாட்டுக்களைக் கூறுகிற எதிர்க் கட்சிகளை அடக்கிவிடக் கொண்டு வரப்பட்ட மசோதா இது. எனவே இம்மசோதாவை உடனே வாபஸ் பெற வேண்டும்’’ என்று எதிர்க் கட்சிகளின் கூட்டறிக்கை மேலும் விவரித்திருக்கிறது. இம் மசோதா ஆய்வுக்கு எந்த வித ஒத்துழைப்பும் தருவதில்லை என்ப தோடு இனி நடைபெறும் பரிசீலனைக் குழுக் கூட்டங்களுக்கே போவதில்லை என்றும் எதிர்க் கட்சிகள் முடிவு செய்துள்ளன. எதிர்க் கட்சிகள் இம்மசோதா பசுத் தோல் போர்த் திய புலி என்பதை நன்கு நிரூபித்துக் காட் டிய பின் பரிசீலனைக்கு என்ன அவசியமோ தெரியவில்லை.

## யார் காரணம்?

‘தமிழ் நாட்டில் மின்சாரப் பற்றாக்குறை ஏற்பட்டதற்கு மத்திய அரசு நிலக்கரி அனுப் பாததே காரணம் ஆகும்’ என்று தமிழக அரசு சம்பந்தப்பட்டவர்கள் கூறும் புகாரை மத்திய அமைச்சர் மோகன் குமாரமங்கலம் கடுமையாக மறுத்திருக்கிறார். ‘‘தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கும் மின்சார நெருக் கடிக்கு மத்திய சர்க்கார் எவ்விதத்திலும் பொறுப்பாளி அல்ல. மின்சாரப் பற்றாக்குறை தொடர்பாக நிலக்கரித் தேவையை விளக்கிப் பத்து நாட்களுக்கு முன்பு வரை மாநில அர சாங்கத்திடமிருந்து கடிதம் எதுவும் வரவில்லை. அதிகார பூர்வமான அறிக்கையும் கிடைக்க வில்லை. ஆனால் அதே சமயத்தில் நிலக்கரிப்

## ராஜாஜி சிந்தனை

எந்த சேவை செய்தாலும் அன்பு நெறியினின்றும் அணுவளவு கூடப் பிறழாதீர்கள்; சண்டை சச்சரவு வழியைப் பின்பற்றாதீர்கள். எது சரி, எது தவறு என்று ஆராய்ந்து தெளிவுபடுத்திக்கொள்ளுங்கள். "நான் செய்யக் கூடிய பெருந் தவறு என் சகோதரனைப் பகைப்பதுதான்" என்று தெளிவாக அறிந்து கொள்ளுங்கள். எத்துணை நல்ல சீர்திருத்தமாயினும் அதைச் செய்து முடிக்கப் பலாத்காரத்தை உபயோகிக்காதீர்கள். அறிவு புகட்டும் வழியையே பயன்படுத்துங்கள். நாம் மாறுதல் செய்ய வேண்டியது அவசியந்தான். ஆனால் ஏற்கனவே உள்ள கஷ்டம் போதும். இதை விட அதிகக் கஷ்டத்தை உண்டாக்கி விடாதீர்கள். பலாத்காரம் மூலமாகத்தான் மாறுதல் செய்ய முடியும் என்று எண்ணுவதற்குக் காரணம் மனிதப் பண்பில் நம்பிக்கை இல்லாததே யாகும். நாம் பலவீனமாக இருக்கும்பொழுதுதான் பலாத்காரத்தைப் பற்றிச் சிந்திக்கிறோம். நீங்கள் தவறான காரியம் செய்தால்கூட நான் உங்களிடம் அறிவு புகட்டும் முறையையே கையாண்டு வந்திருப்பதை அறிவீர்கள். உதாரணமாக யாரேனும் புகை குடித்தால் அது தீயது என்று அறிவு புகட்டவே முயன்று வந்திருக்கிறேன். இதே போல் தான் சமூகப் பழக்க வழக்கங்கள் விஷயத்திலும் நடந்து கொள்ள வேண்டும். குழந்தைகள் பாடம் படிக்காவிட்டால் பலாத்காரம் உபயோகிப்பதால் யாதொரு பயனும் ஏற்படாது. அன்பினால்தான் அவர்களைத் திருத்த வேண்டும். ஆகவே அன்பு முறையினால் சமூக சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்று நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். மாவைச் சுடு தண்ணீரில் கரைக்க வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? மாவின் மீது சுடு தண்ணீரை அப்படியே மொத்தமாக ஊற்றினால் மாவு கரையாது. கட்டியாகப் போய்விடும். அதனால் முதலில் குளிர்ந்த நீரில் கலந்து கொண்டு பிறகு மெதுவாகச் சிறிது சிறிதாகச் சுடு தண்ணீரைக் கலந்தால் மாவைச் சுடு தண்ணீரில் கரைத்துவிடலாம். ஆகவே பலவந்த முறையால் எதையும் சாதிக்க முடியாது. அறிவு புகட்டும் முறையால் தான் முடியும். இந்த உவமை மாவுக்கும் சுடுதண்ணீருக்கும் பொருந்துவதுபோலவே மக்கள் மனத்துக்கும் பொருந்தும்.

அன்பு முறை விரைவாகப் பயன் தராது; பகைமை முறைதான் விரைவாகப் பயன் தரும் என்று எண்ண வேண்டாம். அன்பு முறையும் அறிவு புகட்டும் முறையும்தான் பலன் தரும் வழி. வேறு வழி கிடையாது. பகைமை வழியும், பலவந்த வழியும் தோல்வியுறுமேயன்றி வெற்றி பெறாது. நன்றாக ஆராய்ந்து பார்த்தால் அன்பு முறைதான் அதிவிரைவில் பலன் தருவதாகும்.

பற்றாக்குறையைப் பற்றி மாநில மந்திரிகள் பொதுக் கூட்டங்களில் பேசியதை நான் பத்திரிகைகளில் படித்தேன். உடனடியாகக் கப்பல் மூலம் நிலக்கரியை அனுப்ப முடிவு செய்து நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு விட்டன. சென்ற ஆண்டில் பருவ மழை தவறியதைத் தொடர்ந்து மாநில சர்க்கார் முன் எச்சரிக்கையுடன் போதுமான நடவடிக்கைகள் எடுத்திருந்தால் ஆகஸ்டு மாதத்திலேயே இந்த நெருக்கடியைத் தவிர்த்திருக்க முடியும். ஆனால் மாநில சர்க்கார் முன் எச்சரிக்கையாகவும், கவனமாகவும் இருக்கத் தவறி விட்டது. அதை மறைத்து இப்போது வழக்கம்போல் மத்திய சர்க்கார் மீது பழியைப் போடுவது அர்த்தமற்றது. மாநில சுய ஆட்சி கோஷம் போடும் முதல்வர் மின்சாரப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக மத்திய சர்க்காரும், பிரதம மந்திரியும், முதன் மந்திரிகள் மகாநாட்டைக் கூட்ட வேண்டும் என்று கோரியிருப்பது வியப்பளிக்கக் கூடியது" என்று திரு மோகன் குமாரமங்கலம் கூறியிருக்கிறார்.

## தந்திரப் பேச்சு

தமிழ்நாடு மாணவர் நலக் கழகம் என்ற பெயரையுடைய ஒரு கழகத்தின் ஆண்டு விழாவில் பேசும்போது தமிழ்நாட்டு முதல்வர், "பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் வேலைநிறுத்தம் நடைபெற்றால் உயர் வகுப்பினர் குழந்தைகளுக்கு வீட்டிலேயே படிப்புச் சொல்லிக் கொடுக்க ஆட்கள் இருக்கிறார்கள். ஆனால் பின்தங்கிய சமூகத்தில் அப்படிப்பட்ட நிலை இல்லை. மாணவர்கள் தங்கள் படிப்பைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது. பின்தங்கிய சமூகத்து மாணவர்களுக்கு இந்த அரசு அளித்துள்ள பல சலுகைகளை அவர்கள் ஒழுங்காகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்" என்று பேசியிருக்கிறார். ஏதோ உயர் வகுப்பார் மட்டுமே இந்த அரசை எதிர்ப்பது போலத் தந்திரமாகப் பேசி வர்க்கத் துவேஷத்தை மாணவர்களிடையே புகுத்த முயல்வது அத்தனை விவேகமான காரியமில்லை.

## லஞ்சம் கேட்கிறார்கள்

பண்ருட்டியை அடுத்த கண்டரக்கோட்டையில் நடந்த விழாவில் தி. மு. கழக சட்ட மன்ற உறுப்பினர் திரு வி. கிருஷ்ணமூர்த்தி, ஏழை மக்களுக்கு வெள்ள நிவாரண நிதி அளிப்பதற்குக்கூட அதிகாரிகள் லஞ்சம் கேட்பதாகத் தெரிய வந்துள்ளதாகவும் அத்தகைய அதிகாரிகள் மீது அரசு கடும் நடவடிக்கை எடுக்கும் என்றும் பேசினார். அந்தக் கூட்டத்துக்கு அன்பில் தர்மலிங்கம் தலைமை வகித்தார். ரூ. 250 வெள்ள நிவாரண நிதியாக அளிப்பதற்கு ரூ. 25 லஞ்சமாகத் தர வேண்டியிருப்பதாக அந்தச் சட்ட மன்ற உறுப்பினர் வருத்தப்பட்டார். எதிர்க் கட்சிக்காரர்கள் குறை கூறினால் ஆளும் கட்சி அதை மறுக்கக் கூடும். ஆனால் இந்தக் குறையை ஆளும் கட்சியின் சட்டமன்ற உறுப்பினரே கூறியுள்ளார். லஞ்சம் வாங்கும் அதிகாரிகளை மட்டும் தண்டித்தால் போதாது. சொந்தக் கட்சிக்காரரானாலும் சும்மாவிடக் கூடாது.



# எதிர்கொண்டு அழைப்பான்!

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

சமுத்திரம் ஆடாமல் அசையாமல் இருக்கிறபோது ஒரு காற்று அடித்தால் உடனே அதில் ஜலத்துளிகள் குமிழ்களாகத் தோன்றுகின்றன. இன்னொரு காற்று அடிக்கிறபோது அந்தக் குமிழ்கள் உடைந்து போகின்றன. பரமாத்மா ஆடாத அசங்காத சமுத்திரம் மாதிரி. மாயை என்கிற காற்றினால் அதிலே ஜீவாத்மாக்கள் என்கிற நாமெல்லாம் குமிழ் மாதிரி தோன்றியிருக்கிறோம். ஆசாரியருடைய கடாக்ஷம் என்கிற நல்ல காற்று நம்மேல் பட்டால், குமிழ் உடைந்து ஜலத் துளி சமுத்திரத்தோடு ஐக்கியமாகிவிடுவதுபோல், நாமும் பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து விடுவோம்.

சமுத்திர ஜலம் என்றென்றும் அளவு குறையாமலேதான் இருக்கிறது. அதிலிருந்து ஆவி பிரிந்து சென்று மழையாகி உலகத்தில் பல விதங்களில் நதி, ஓடை, வாய்க்கால், ஏரி, குளம், கிணறு என்று ஜலாசயங்களாக ஆகின்றன. சமுத்திரம் வற்றுவதில்லை. அதில் புதிதாக வெள்ளம் வருவதுமில்லை. அதிலிருந்து வந்த ஆறு குளங்கள் வற்றலாம்; அல்லது இவற்றில் வெள்ளம் வரலாம். வெயில் நாளானால் வீட்டுக் குழாயில் ஜலம் இல்லை; ரெட்டேரியில் ஜலம் இல்லை என்கிறோம். மழைக்காலத்தில் கோதாவரியில் வெள்ளம், காவேரியில் உடைப்பு என்று பேசுகிறோம். ஆனால் சிருஷ்டி காலத்தில் இந்த உலகத்தில் எத்தனை ஜலம் இருந்ததோ அதில் ஓர் இம்மிகூட – க்ரெயின்கூட – இன்றுவரை குறையவில்லை, கூடவும் இல்லை. பணக்காரர்கள் சிலர் வீடுகளை விற்றுப் பாங்கில் போடுவார்கள்; பாங்குப் பணத்தை ஷேர்களாக மாற்றுவார்கள். மொத்த சொத்து மாறாது. அவற்றின் ரூபம்தான் பலவிதத்தில் மாறும். எல்லாவற்றையும் கூட்டினால் கணக்கு சரியாக இருக்கும். அப்படியேதான் லோகத்தில் உள்ள மொத்த ஜலம் சமுத்திரத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் மேகத்தில் இருக்க வேண்டும். அல்லாது போனால் மழையாக இருக்க வேண்டும், அல்லது நதியாக, ஏரி குளங்களாக இருக்க வேண்டும்.

பரமாத்மா பலவாகத் தோன்றியிருக்கிறார். தோன்றிய பின்னும் சமுத்திரம் மாதிரி கூடாமல், குறையாமல் இருக்கிறார். நமக்குக் கூடுதல், குறைவு எல்லாம் உண்டாகிறது. ஆனால் உள்ளது ஒன்றேதான் என்ற ஞானம் வந்தால் எங்குமே கூடுதலும் இல்லை, குறைவும் இல்லை.

ஜலத்தை திருஷ்டாந்தமாக வைத்து பரமாத்ம ஜீவாத்ம சம்பந்தத்தைச் சொல்லும்போது நதிகளைப் பற்றி விசேஷமாகச் சொல்ல வேண்டும். சமுத்திர ஜலம் மழையாகி அதிலிருந்து உண்டான ஏரியும், குளமும், குட்டையும் மறுபடியும் சமுத்திரத்தில் கலப்பதில்லை. ஆனால் எல்லா நதிகளும் சமுத்திரத்தையே தேடி வந்து கலந்து விடுகின்றன. வடக்கே ஒரு நதிக்கு 'சோண்' என்று பெயர். 'சோணம்' என்றால் சிவப்பு. இந்த நதி சிவப்பான மண் வழியே ஓடி வருகிறது. ஆந்திராவில் கிருஷ்ணா நதி இருக்கிறது. 'கிருஷ்ணை' என்றால் கறுப்பு. இந்த நதி கறுப்பு மண் மீது ஓடுகிறது. கங்கை என்றால் வெளுப்பு. இதுவும் அது ஓடி வருகிற பிரதேசத்தைப் பொறுத்து ஏற்பட்ட பெயர்தான். மூக்குணங்களில் எப்படிப் பாய்கிறதோ, அதை ஒட்டி ஜீவாத்மாவின் சுபாவம் அமைகிறது. எப்படியானாலும் கடைசியில் பரமாத்ம சமுத்திரத்தில்தான் கலந்தாக வேண்டும்.

Water finds its level – தொடர்புடைய நீர்ப் போக்கு ஒரே மட்டத்தில் இருக்க முயலும் என்பார்கள். மலை உச்சியில் மழை பொழிந்து நதி உண்டாகிறது. அங்கிருந்து கீழே கன வேகமாக, ஒரே இரைச்சலோடு நதி விழுகிறது. பூமியில் ஓடும்போது அத்தனை சத்தம் இல்லை. முடிவில் சமுத்திரத்தில் கலந்த பின் சத்தமே இல்லை. அப்போதுதான் நதி தன் லெவலுக்கு வருகிறது. எதிலுமே சரி, லெவல்-அதாவது அளவு அறிந்து, அந்த மட்டத்தோடு நிற்கிற மனோபாவம்-வந்தால்தான் சாந்தம் உண்டாகும். லெவலுக்கு மீறிச் செய்கிற 'தாட்பூட்' காரியங்கள் பிறருக்குப் பிரமிப்பூட்டலாம். ஆனால் இதனால் நாமே நம் சாந்தியைக் குலைத்துக் கொள்வதுதான் பலன். உருட்டல், புரட்டல், இரைச்சல் எல்லாவற்றையும் குறைத்துக் கொண்டு வருகிற நதியைச் சமுத்திரம் எதிர்கொண்டு சென்று வாங்கிக் கொள்கிறது. இதனால்தான் நதியின் சங்கம ஸ்தானங்களுக்குச் சிறிது தூரம் முன்னாலிருந்தே ஆற்று ஜலம் உப்புக் கரிக்கிறது. நாம் லெவலை மீறாமல், அடக்கமாகச் சென்றால், பரமாத்ம சமுத்திரம் நம்மை எதிர்கொண்டு அழைத்துத் தனக்குள் அடக்கம் செய்து கொண்டு விடும்.



# ரேடியோவின்
# சிறந்த கட்டங்களுக்கு
# எஸ்ட்ரெலாவின்
# சிறந்த ரேடியோ பாட்டரிகள்

FOCUS-19.(G) TH

ஆட்டத் துறைச் செய்திகளை உற்சாகமூட்டும் வகையிலே கணீரென்ற நிறைவான தெளிவுடன் ஒலித்திடச் செய்பவை கூடுதலான சக்தி-செறிந்த எஸ்டரெலா பேட்டரிகள். காகித, பிளாஸ்டிக், உலோகக் கவச உறைகளிட்ட பேட்டரிவகைகள் உள்ளன நீங்கள் தேர்ந்தெடுக்க. கசியாத் தன்மை உடையவை அவை, நெடுங்காலம் உழைப்பவை, டார்ச்சுகளுக்கும் இவையே சிறந்தவை, ஓங்கிய ஒளியையும் நம்பிக்-கையான உழைப்பையும் தருபவை.





**எஸ்ட்ரெலா**
**பேட்டரிகள்**

**அதிக சக்தி அதிக உபயோகம்**

எஸ்ட்ரெலா பேட்டரீஸ்
லிமிடெட், பம்பாய்-19.




## 16. ரமாமணியின் தோல்வி

**தா**ரிணி உண்மையில் ஒரு ராஜகுமாரி என்று எண்ணியதும் ராகவனுடைய உள்ளம் புயற்காற்றில் அலைகடலைப் போலக் கொந்தளித்தது. அதுவரை அவனுக்கு விளங்காமலிருந்த பல விஷயங்கள் விளங்கின. தாரிணி சாதாரணப் பெண் அல்ல என்று பல முறை தான் எண்ணமிட்டது எவ்வளவு சரியாகப் போயிற்று என்று நினைத்துக் கர்வம் கொண்டான். ஒரு ராஜகுமாரியின் காதலுக்கு, தான் ஒரு சமயம் உரியவனாக இருந்தது குறித்துப் பெருமிதம் அடைந்தான். அந்த அபூர்வமான காதலைத் தான் பயன்படுத்திக்கொள்ளாமல் போனதை எண்ணி ஆதங்கம் அடைந்தான். ரஜனிபூர் ராஜ்யமே தனக்கு வந்திருக்க வேண்டியது என்றும், அது அநியாயமாக நஷ்டமாகிவிட்டது என்றும் அவனுடைய அந்தரங்கத்தில் ஒரு சபல நினைவு தோன்றி மறைந்தது! தான் எவ்வளவோ முயன்றும் அறிய முடியாத தாரிணியின் பிறப்பு மர்மத்தை இந்தச் சூரியா அறிந்துகொள்ள முடிந்தது பற்றி ஒரு பக்கம் வியப்பு உண்டாயிற்று. ராஜகுமாரி தாரிணி இந்தச் சூரியாவிடம் தன் அந்தரங்கத்தை வெளியிட்டிருப்பதை எண்ணி மனம் எரிந்தான். தாரிணி, சூரியா, சீதா — ஆகிய மூவர் மீதும் அவனுக்கு அளவில்லாத கோபம் பொங்கி வந்தது. அந்த மூன்று பேரும் சேர்ந்து தன்னுடைய வாழ்க்கையைப் பாழாக்குவதற்குச் சதி செய்ததாக அவனுக்குத் தோன்றியது.

ஆயினும் இன்னும் சில விவரங்களைச் சூரியாவிடம் தெரிந்துகொள்ள வேண்டியதாயிருந்தது. ஆகையால் . தன்னுடைய கோபத்தைக் காட்டி இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாது என்று தீர்மானித்தான். ஆத்திரத்தையும் எரிச்சலையும் அசூயையும் குரோதத்தையும் கஷ்டப்பட்டு மனத்துக்குள் அடக்கிக் கொண்டு, ''சூரியா! நீ சொன்ன• கங்காபாயின் கதை ஸ்காட் நாவல்களையும் டூமாஸ் நாவல்களையும் தோற்கடிக்கும் அதிசயமான கற்பனைக் கதையைப் போல் இருக்கிறது. கேட்பதற்கு வெகு சுவாரசியமாக இருக்கிறது!'' என்றான்.

''கற்பனைக் கதைகளையெல்லாம் மிஞ்சிவிடும் உண்மைச் சம்பவங்கள் நம்முடைய சுதேச சமஸ்தானங்களில் எத்தனையோ நடந்திருக்கின்றன. ஆனால் எனக்கு அந்தக் கதைகள் சுவாரசியமாக இருப்பதில்லை. உள்ளத்தைப் பிளக்கும் துக்கத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்குகின்றன. கங்கா பாயையும் ரமாமணியும் போல் எத்தனை ஆயிரம் பெண்கள் துர்க்கதி அடைந்தார்களோ, யாருக்குத் தெரியும்? அவ்வளவு பெண் தெய்வங்களின் சோகக் கண்ணீரும் சாபமும் நம்முடைய சுதேச சமஸ்தானங்களை இன்னும் பொசுக்கி அழித்துவிடவில்லையே என்பதை நினைத்தால் தான் எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது!'' என்று சூரியா கூறினான்.

''அதில் ஒன்றும் எனக்கு ஆச்சரியமில்லை. இது கலியுகம் அல்லவா? கற்பரசிகள் சாபம் கொடுத்துப் பொசுக்கும் . சக்தியெல்லாம் திரேதாயுகத்துடன் போயிற்று. இப்பொழுதெல்லாம் அக்கிரமக்காரர்களுக்குத்தான் காலம். மேலே சொல்! கங்கா பாய் காலமான பிறகு ரமாமணி என்ன செய்தாள்? அந்த அதிர்ஷ்டக்கார ஸ்டேஷன் மாஸ்டர் — என்னுடைய அருமை மாமனார் — என்ன செய்தார்? வைசம்பாயனரைப் பார்த்து ஜனமேஜய மகாராஜன் கேட்பது போலக் கேட்கிறேன்!'' என்றான் ராகவன்.

''மேலே சொல்வதற்கு அதிகம் இல்லை. ஒருவேளை என்னைவிட உங்களுக்கு அதிகமாகத் தெரிந்திருக்கலாம். ஆயினும் எனக்குத் தெரிந்த மீதி விவரங்களையும் சொல்லி விடுகிறேன்'' என்றான் சூரியா.

* * *

**க**ங்கா பாயின் சோக முடிவு ரமாமணியைக் குலுக்கிப் போட்டு விட்டது. அவளுடைய அறிவே கலங்கி விட்டது. அந்த நிலைமையில் ரமாமணி இருந்தபோது குழந்தை தாரிணியைப் பாதுகாத்து வளர்க்கும் பொறுப்பு துரைசாமி ஐயருக்கு ஏற்பட்டது. இதனால் அவருக்கு அக்குழந்தையிடம் ஏற்கனவே இருந்த பாசம் மேலும் வளர்ந்து உறுதிப்பட்டது.

ரமாமணி பாய்க்கு அறிவு கொஞ்சம் தெளிந்தபோது தன் தங்கையின் அகால முடிவுக்குக் காரணமாயிருந்த ரஜனிபூர் ராஜாவையும் அவருடைய துர்மந்திரி மதோங்கரையும் பழிக்குப் பழி வாங்குவது என்று சங்கல்பம் செய்து கொண்டாள். இந்த உத்வேகமே அவளுடைய உடலுக்கும் உயிருக்கும் வலிமையைத் தந்து எத்தனையோ கஷ்டங்களைச் சகிக்கும் சக்தியை அவளுக்கு அளித்து வந்தது.

பழி வாங்கும் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கும் குழந்தை தாரிணியை மதோங்கர் வசத்தில் விழாமல் பாதுகாப்பதற்கும் ரமாமணிக்குப் புருஷத் துணை அத்தியாவசியமா யிருந்தது. ஆதலின் பெண்மைக்குரிய சகல சாமர்த்தியங்களையும் பிரயோகித்து ஸ்டேஷன் மாஸ்டர் துரைசாமியின் சிநேகத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டாள்.

துரைசாமி ஐயரின் பாடு ரொம்பவும் சங்கடமாகத்தான் இருந்தது. அவர் தம்முடைய சொற்ப சம்பளத்தைக் கொண்டு, பம்பாய் நகரில் இரண்டு தனிக் குடும்பங்களை நடத்த வேண்டி வந்தது. பணக் கஷ்டம் அதிகமாயிற்று. அதோடு, தம் மனைவி ராஜம்மாளிடம் உண்மை நிலைமையைச் சொல்வதற்கு வழியில்லாததால், பணச் செலவுக்குப் பொய்க் காரணம் சொல்ல வேண்டியிருந்தது. குதிரைப் பந்தய தினங்களில் பந்தயத்துக்குத் தாம் போய் வந்ததாகவும் பணம் நஷ்டப் பட்டதாகவும் சொல்லி வந்தார்.



முதலில் பிறந்த ஆண் குழந்தை இறந்து போனதில் ராஜம்மாள் பெருந் துயரத்துக்கு ஆளானாள். அதோடு உத்தமமான ஒழுக்கம் படைத்தவர் என்று தான் எண்ணி யிருந்த கணவன் குதிரைப் பந்தயத்துக்குப் போக ஆரம்பித்திருப்பது பற்றிப் பெரிதும் வருந்தினாள். அதைத் தவிர வேறு கெட்ட நடவடிக்கைகளுக்குத் தன் கணவர் ஆளாகி யிருப்பாரோ என்ற சந்தேகங்கள் அவள் மனத்தில் தோன்றின. அவற்றை வெளியிட்டுக் கணவரிடம் கேட்கும் தைரியம் ஏற்படவில்லை. மனத்துக்குள்ளேயே துயரத்தை வைத்து வளர்த்து வந்தாள்.

இதற்கிடையில் தாரிணி பிறந்த இரண்டு வருஷங்களுக்குப் பிறகு ராஜம்மாளுக்குச் சீதா பிறந்தாள். இதற்குப் பிறகாவது தன் கணவனுடைய நடவடிக்கைகள் திருந்தும் என்று ராஜம்மாள் எதிர்பார்த்தாள். அவ்வித நல்ல மாறுதல் ஏற்படாதது கண்டு மேலும் மனம் குன்றினாள்.

நாட்கள் வருஷங்களைப் போலவும் வருஷங்கள் யுகங்களைப் போலவும் ராஜம்மாளுக்குச் சென்று வந்தன. ரமாமணிக்கும் அப்படித்தான்.

ஆனால் குழந்தைகளான சீதாவுக்கும் தாரிணிக்கும் வருஷங்கள் இறகு கட்டிக் கொண்டு பறந்து சென்றன. துரைசாமி ஐயருக்கோ, கழிந்த நாட்களையும் வருஷங்களையும் கணக்குப் பண்ணுவதற்கே நேரம் கிடைக்கவில்லை.

தாரிணிக்கு வயது வந்தபோது தன்னுடைய தாயும் தகப்பனும் உலகத்திலுள்ள மற்ற தாய் தந்தையரைப் போல் மணம் செய்துகொண்டு வாழ்கிறவர்கள் அல்ல என்னும் விஷயம் தெரிய வந்தது. தன்னுடைய தாயின் மர்மமான காரியங்கள் அவளுக்குப் பல வித ஐயங்களை உண்டாக்கின. ஒவ்வோரு சமயம் விலை உயர்ந்த ஆபரணங்களை அவளுடைய தகப்பனிடம் தாயார் கொடுத்து விற்றுக்கொண்டு வரச் சொல்வதைக் கவனித்திருந்தாள். ஒரு நாள் தாயாரிடம் சந்தேகங்களை வெளியிட்டாள். அதன் பேரில் ரமாமணி ரஜனிபூர் ராஜாவினால் தன்னுடைய தங்கை கங்காபாய்க்கு நேர்ந்த கதியைப் பற்றியும் அதற்குப் பழிக்குப் பழி வாங்கத்தான் தீர்மானித்திருப்பது பற்றியும் தாரிணியிடம் கூறினாள்.

கங்கா பாயின் கதையைக் கேட்டதிலிருந்து தாரிணியின் மனம் தான் பிறந்த தேசத்தின் நிலைமையைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது. சுதந்திரப் போராட்டத்திலும் சமூகத் தொண்டிலும் ஈடுபடும் ஆர்வம் உண்டாயிற்று. அச்சமயம் இந்திய மக்களின் உள்ளத்தைக் கவர்ந்திருந்த உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தில் கலந்து கொண்டாள். பிற்பாடு, பீஹார் பூகம்பத்தைப் பற்றிய செய்தி வந்தபோது பூகம்பத்தினால் துன்புற்றவர்களுக்குச் சேவை செய்வதற்காகச் சென்றாள்.

ஏறக்குறைய இதே சமயத்தில் ராஜம்மாள் நீடித்த நோய் வாய்ப்பட்டிருந்தாள் என்றும், பிழைப்பது துர்லபம் என்றும் ரமாமணிக்குத் தெரியலாயிற்று. தன்னால் கஷ்டத்துக்கு ஆளான ராஜம்மாளையும், அவளுடைய குமாரி சீதாவையும் பார்க்க வேண்டும் என்ற ஆசை ரமாமணியின் மனத்தில் வெகு காலமாக இருந்து வந்தது. அந்த ஆசை நிறைவேறுவதற்கு இதுதான் தருணம் என்று எண்ணினாள். ரஜனிபூர் ஆபரணங்களில் தன்னிடம் மிச்சமிருந்த ஒரே ஒரு ரத்தின ஹாரத்தையும் இரண்டாயிரம் ரூபாய் பணத்தையும் எடுத்துக் கொண்டு துரைசாமி இல்லாத சமயத்தில் ராஜம்மாளைப் பார்க்கச் சென்றாள். சீதாவின் கல்யாணத்துக்கு என்று இரத்தின ஹாரத்தையும் பணத்தையும் கொடுத்துவிட்டுத் திரும்பினாள்.

இந்த முக்கியமான கடமை தீர்ந்த பிறகு ரமாமணி தன் வாழ்க்கையின் நோக்கத்தை நிறைவேற்ற முயன்றாள். பம்பாய்க்கு வந்திருந்த ரஜனிபூர் ராஜாவைக் கத்தியால் குத்திக் கொல்லப் பிரயத்தனம் செய்தாள். அந்தப் பிரயத்தனம் பலிக்கவில்லை, கொலை செய்ய



முயன்றதாகச் சிறையில் அடைக்கப் பட்டாள்.

சிறையில் இருந்தபோது ரமாமணி யின் பைத்தியம் முற்றியது. சிறையி லிருந்து பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குச் சென்று சில காலத்துக்குப் பிறகு அங் கிருந்து விடுதலை அடைந்தாள்.

ரஜனிபூர் ராஜாவும் அதற்குப் பிறகு அதிக காலம் உயிரோடிருக்கவில்லை. ஆகவே விடுதலையாகி வந்த ரமாமணி அடுத்தாற்போல் தான் பழி தீர்க்க வேண்டிய மதோங்கரின் பேரில் கவனம் செலுத்தினாள். புது டில்லியின் சாலை களில் அலைந்து திரிந்து மதோங்கரைத் தனியாகச் சந்திக்கும் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தாள். ஆனால் அந்த முயற்சியிலும் ரமாமணி தோல்வியே அடைந்தாள். ஏனெனில் அவள் மதோங்கரை வெகு காலம் தேடிக் கொண்டிருந்து கடைசியில் ஒரு நாள் பிடித்து விட்டோம் என்று எண் ணிய சமயத்தில், ரமாமணிக்கு முன் பாகவே மதோங்கரின் பேரில் பழி தீர்க்க விரும்பியவன் ஒருவன் தன்னுடைய நோக்கத்தில் வெற்றி பெற்றுவிட்டான்!

## 17. படிகள் பிழைத்தன!

கங்காபாய் — ரமாமணி இவர்களின் சோகக் கதையைக் கூறிவிட்டுச் சூரியா சௌந்தரராகவனைப் பார்த்து, "மாப் பிள்ளை ஸார்! யாரோ ஒரு வடக்கத்தி ஸ்திரீ வந்து சீதா அத்தங்காளைப் பற்றி எச்சரித்தாள் என்றீர்களே? அவள் ரமா மணி என்கிற ரஸியா பேகமாகத்தான் இருக்க வேண்டும். சீதாவிடம் அவள் சிரத்தை கொள்ளக் காரணம் உண்டு என்பது தெரிகிறதல்லவா?" என்றான்.

"தெரிகிறது, சூரியா! ஆனால் நீ என்ன, இந்தக் காலத்துக் கதை ஆசிரி யர்களைப் போல் சடக்கென்று கதையை மொட்டையாக முடித்து விட்டாயே? கதாநாயகர்களும், கதாநாயகிகளும் பிற்பாடு என்ன ஆனார்கள் என்று சொல்லவில்லையே?" என்று ராகவன் கேட்டான்.

"எனக்குத் தெரிந்த வரையில் சொல்லி விட்டேன். நீங்கள் இன்னும் யாரைப் பற்றி என்ன கேட்கிறீர்கள்?" என்றான் சூரியா.

"ஏன்? என்னுடைய அருமந்த மாம னாரைப் பற்றிக் கேட்கிறேன். என் னுடைய கல்யாணத்துக்குப் பிறகு அவரை ஒரு தடவை கூட நான் பார்த்ததே யில்லை. அவர் இப்போது எங்கே இருக்கிறார்? என்ன செய்கிறார்?" என்று ராகவன் கேட்டான்.

"அதுதான் எனக்கும் தெரியவில்லை. ரஸியா பேகம் இருக்கும் இடமும் தெரிய வில்லை. அவர்களை நானும் தாரிணியும் எவ்வளவோ தேடித் தேடிப் பார்த் தோம்; பயனில்லை!" என்றான் சூரியா.

"எதற்காகத் தேடினீர்கள்?" என்று ராகவன் கேட்டான்.

"தாரிணிக்குத் தன்னுடைய வர லாற்றில் இன்னும் ஒரே ஒரு சந்தேகம் இருக்கிறது. அந்தச் சந்தேகத்தைத் தீர்க் கக்கூடியவர்கள் துரைசாமி ஐயரையும் ரமாமணியையும் தவிர வேறு யாரும் இல்லை!" என்று சூரியா சொல்லிவிட்டு, முகத்தில் புன்னகையுடன், "மிஸ்டர் ராகவன்! அதுவல்லாமல் இன்னொரு காரியத்துக்கு அவர்களுடைய அநு மதியும் ஆசீர்வாதமும் பெற வேண் டியதாயிருக்கிறது! அதற்காகவும் தேடி னோம். இன்னமும் தேடிக் கொண்டிருக் கிறோம்" என்றான்.

சூரியாவின் குரலும் முகப் பொலிவும் ராகவனுடைய மனத்தில் ஓர் ஐயத்தை உண்டாக்கின. "என்ன காரியத்துக்கு அவர்களுடைய அநுமதியும் ஆசீர்வாத மும் வேண்டும்?" என்று கேட்டான்.

"நீங்களே யூகித்துக் கொள்ளலாம். எனினும் நீங்கள் கேட்கிறபடியால் சொல்லி விடுகிறேன். எப்படியும் ஒரு நாளைக்குத் தெரிய வேண்டியதுதானே? நானும் தாரிணியும் கல்யாணம் செய்து கொள்ளுவதென்று தீர்மானித்திருக்கி றோம்!...."

ராகவன் கலகலவென்று சிரித்து விட்டு, "அட சூரியா! உன்னைப் புத்தி சாலி என்று இத்தனை நாளும் நினைத் திருந்தேன்!" என்றான்.

"அந்த அபிப்பிராயம் இப்போது தவறு என்று தோன்றுகிறதா?" என்று சூரியா கேட்டான்.

"ஆமாம்; இல்லாவிட்டால் தாரிணி யைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன் என்று சொல்லுவாயா?— இத்தனை நாள் அவளுடன் பழகிவிட்டு? இதைக் கேள் சூரியா! தாரிணியை ஒரு சமயம் நானே கல்யாணம் செய்து கொள்ள எண்ணியிருந்தேன். அவளும் என்னைக் காதலிப்பதாக வேஷம் போட்டு நடித்தாள். இதெல்லாம் உனக் குத் தெரிந்திருக்கும் என்று நினைத் தேன்...."

"ராகவன்! தாரிணியைப் பற்றி அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். தாரிணி வேஷம் போட்டு நடித்தாள்

என்று சொன்னால் அவளை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை என்றுதான் அர்த்தம்!''

''என்னை விட அவளை நீ நன்றாக அறிந்து கொண்டிருப்பதாக எண்ண மாக்கும்!'' என்றான் ராகவன்.

''அதில் சந்தேகமில்லை. தாரிணியை உங்களுக்குத் தெரிந்திருந்தால் அவளை வேஷம் போட்டாள் என்றோ, நடித் தாள் என்றோ சொல்ல மாட்டீர்கள்.''

''ஒரு சமயம் என்னைக் காதலித்த தாகக் கூறியவள் இப்போது உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளப் போவது பற்றி என்ன சொல்கிறாய்? இரண்டிலே ஒன்று பொய்யாகத்தானே இருக்க வேண்டும்?''

''ஒரு நாளும் இல்லை. யாருக்கும் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளும் உரிமை உண்டு அல்லவா? ஏதாவது ஒரு விஷயத்தில் தவறு செய்து விட்டதாகத் தெரிந்தால் அதைத் திருத் திக்கொள்ள வேண்டாமா? தங்களிடம் ஒரு காலத்தில் தாரிணி அன்பு கொண் டிருந்தது உண்மை. அது வேஷமும் அல்ல; நடிப்பும் அல்ல. ஆனால் பிற்பாடு தன்னுடைய வாழ்க்கை லட்சியங்களுக் குப் பொருத்தமில்லை என்று தெரிந்த பிறகு தங்கள் விஷயத்தில் அவளுடைய மனத்தை மாற்றிக் கொண்டால், அது எப்படித் தவறாகும்?''

''சூரியா! நீ வக்கீல் வேலைக்குப் போயிருக்க வேண்டும். போயிருந்தால் நல்ல பெயர் வாங்கி யிருப்பாய். கெட் டிக்கார வக்கீலைப் போல் தாரிணியின் கட்சி பேசுகிறாய். ஆனால் அது வீண். தாரிணியைப் பற்றி உன்னை விட எனக்கு நன்றாய்த் தெரியும். என்னைக் காதலிப்பதாக அவள் வேஷம் போட் டது எதற்காக என்றும் தெரியும். வேறு ஒன்றுமில்லை. கேவலம் இரண்டாயிரம் ரூபாய் பணத்துக்காகத்தான்! சுதேச ராஜாக்களின் சபைகளைத் தேடிக் கொண்டு போன பாடகியின் மகள் தானே? அவளிடம் வேறு என்ன எதிர் பார்க்க முடியும்?''

சூரியா கொதித்து எழுந்து, ''ராக வன்! ஜாக்கிரதை! தாரிணியின் ஒழுக் கத்தைப் பற்றி ஏதாவது சொன் னால்....?'' என்றான். மேலே பேச வர வில்லை. அவனுடைய உதடுகள் துடித்தன.

''ஏதாவது சொன்னால், என்னடா அப்பா செய்வாய்? ஒரே குத்தாய்க் குத் திக் கொன்றுவிடுவாயோ ரஷியா பேகத்தைப் போல!'' என்று ராகவன் ஏளனம் செய்தான்.

''சரி, மாப்பிள்ளை! உங்களுடன் பேசு வதில் பிரயோஜனம் இல்லை. நான்

$

பாலருக்கு எப்படி இந்தச் சின்னம் வந்தது? US என்ற எழுத்துக்களைக் குறிக்க முதலில் $ என்று போட்டார்கள். பிறகு சௌகர்யத் துக்காக $ இப்படி மாற்றப்பட்டுவிட்டது.

-புக் ஆஃப் நாலட்ஜ்

போய் வருகிறேன்!'' என்று சூரியா புறப்பட்டான்.

''அடேடே! அப்படி யெல்லாம் கோபித்துக் கொண்டு கிளம்பாதே, அப்பா! உன் அருமை அத்தங்காள் ஒழுக் கத்தில் சிறந்த துரைசாமி ஐயரின் செல் வப் புதல்வி — சீதா இப்போது எங்கே இருக்கிறாள், என்ன செய்து கொண் டிருக்கிறாள் என்று சொல்லி விட்டாவது போ! அவளைப் பற்றி நான் ஏதாவது சொன்னால் கூடச் சண்டைக்கு வரு வாயோ என்னவோ? என்னைக் காட்டி லும் சீதாவை உனக்கு நன்றாகத் தெரி யும் என்று சொன்னாலும் சொல்லுவாய். நான் தாலி கட்டிய புருஷன்தானே? நீ அருமை அம்மாஞ்சி அல்லவா?''

சூரியா தரையை நோக்கிக் குனிந்து நின்றான். அவனுடைய கண்களில் கண் ணீர் ததும்பி இரண்டு சொட்டுக் கண் ணீர் கீழேயும் விழுந்தது.

''இது என்னடா, சூரியா! பெண் பிள்ளை மாதிரி கண்ணீர் விடுகிறாய்? உன் அத்தங்கா சீதாவின் பெயரைச் சொன் னதுமே இப்படி உடலும் உள்ளமும் உருகி விடுகிறாயே? அவளுக்கும் உனக் கும் அப்படி என்ன அந்தரங்கச் சிநே கிதம்?...'' என்றான் ராகவன்.

சூரியா கண்களைத் துடைத்துக் கொண்டு பளிச்சென்று ராகவனை நிமிர்ந்து பார்த்து, ''என்னை எது வேணுமானாலும் சொல்லுங்கள். தாரி ணியைப் பற்றி வேணுமானாலும் சொல் லுங்கள். ஆனால் சீதாவின் பேரில் அவ தூறு சொல்லுகிறவர்களின் நாக்கு அழு கிப்போகும். அத்தகைய பாதகர்கள்

கொடிய நரகத்துக்குப் போவார்கள். பூமி பிளந்து அவர்களை விழுங்கிவிடும்!'' என்றான். சூரியா கூறிய கடுமொழிகளைக் கேட்டு ராகவன்கூடச் சிறிது பயந்து போனான்.

சூரியா மேலும் கூறினான்: ''சீதாவைப் பற்றி எனக்கு என்ன இவ்வளவு கரிசனம் என்று கேட்டீர்கள் அல்லவா? இதோ சொல்லுகிறேன். சீதாவின் தாயார்—என்னுடைய அத்தை—கடைசி மூச்சுப் போகும் சமயத்தில் — 'சீதாவைக் கவனித்துக் கொள்!' என்று என்னிடம் சொல்லி விட்டுப் போனாள். அது மட்டும் அல்ல. உங்களுக்கும் சீதாவுக்கும் கல்யாணம் நடந்ததற்கு முக்கிய காரணமா யிருந்தவன் நான். இன்று வரையில் ஒருவரிடமும் நான் சொல்லாத ஒரு விஷயத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள். உங்களுடைய கல்யாணத்தன்று அத்திம்பேர் துரைசாமி ஐயர் மாங்கல்யதாரணம் நடந்த பிறகு வந்தார் என்பது உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதல்லவா? ஆகையினால்தான் என்னுடைய மூத்த அத்திம்பேர் சீதாவைக் கன்னிகாதானம் செய்து கொடுக்க நேரிட்டது. கல்யாணத்தன்று முதல் நான் என் தகப்பனாருக்கு ஒரு தந்தி வந்தது. 'சீதாவின் கல்யாணத்தை நிறுத்திவிடவும்' என்று தந்தியில் கண்டிருந்தது. துரைசாமி ஐயர் என்று கையெழுத்தும் இருந்தது. அந்தத் தந்தி என்னிடம் கிடைத்தது. அதை நான் என் தகப்பனாரிடம் கொடுக்கவில்லை. வேறு யாரிடமும் அதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவும் இல்லை. மாப்பிள்ளை! நீங்கள் முதன் முதலில் என் தங்கை லலிதாவைப் பார்க்க ராஜம்பேட்டைக்கு வந்தீர்கள். அப்போது தற்செயலாகச் சீதாவும் நீங்களும் பார்த்துக்கொண்டீர்கள். அன்றுவரையில் கற்பனை உலகத்திலே மட்டும்தான் காதல் உண்டு என்று நினைத்திருந்தேன். வாழ்க்கையில் புருஷன் மனைவி சண்டைகளை மட்டும்தான் பார்த்திருந்தேன். 'கண்டதும் காதல்' என்பது உங்கள் விஷயத்தில் உண்மையானதை என் கண் முன்னே கண்டு பரவச மடைந்தேன். அப்படி மனமொத்துக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ளும் உங்களுக்கு நடுவில் தடையாக வருவதற்குச் சீதாவின் தகப்பனாருக்குக் கூடப் பாத்தியதை கிடையாது என்று எண்ணினேன். கல்யாணம் நடந்தது. அரை மணி நேரத்துக்கெல்லாம் துரைசாமி ஐயர் வந்தார். 'தந்தி வந்ததா?' என்று கேட்டார். நான் செய்ததைச் சொல்லி, திருமாங்கல்யதாரணம் ஆகிவிட்டது என்றும் சொன்னேன். 'சரி! கடவுளுடைய சித்தம் அப்படி யிருக்கும்போது நாம் என்ன செய்யலாம்?' என்று துரைசாமி ஐயர் கூறினார். இவ்வளவும் நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபகம் வருகிறது''.

இதைக் கேட்ட ராகவனுடைய உள்ளத்தில் கோபம் மேலும் கொந்தளித்துப் பொங்கிற்று. ஆகா! இந்த அதிகப் பிரசங்கி எவ்வளவு தூரம் நம்முடைய வாழ்க்கையையே பாழாக அடித்துவிட்டான்? இவன் ஏன் குறுக்கிட்டுத் துரைசாமி ஐயரின் தந்தியை அமுக்கியிருக்க வேண்டும்? இவன் குறுக்கிடாதிருந்திருந்தால் தன் வாழ்க்கையின் போக்கே வேறு விதம் ஆகியிருக்கலாம் அல்லவா?

எனினும், கோபத்தை விட விஷயத்தை அறியும் ஆவல் அச்சமயம் ராகவனுக்கு அதிகமா யிருந்தது.

''ரொம்ப சரி! உன்னுடைய செய்கையின் நியாயா நியாயத்தைப் பற்றிப் பிறகு கவனிக்கலாம். ஆனால் துரைசாமி ஐயர் எதற்காக அப்படிக் 'கல்யாணத்தை நிறுத்தவும்' என்று தந்தி கொடுத்தார்?'' என்று ராகவன் கேட்டான்.

''ரமாமணி என்கிற ரஸியாபேகம் ரஜனிபூர் ராஜாவைக் கொல்ல முயன்று சிறைத் தண்டனை பெற்ற சமயத்தில் தாரிணி பீஹாரில் இருந்தாள். அவளைப் பார்த்து ஆறுதல் சொல்வதற்காகத் துரைசாமி ஐயர் பீஹாருக்குப்

### மலையைக் கெல்லி எலியைப் பிடிக்கலாம்!

அண்டார்ட்டிக் மகா சமுத்திரத்தில் பனிக்கட்டிக் குன்றுகள் மிதக்கும். 'ஐஸ்பேர்க்' என்பார்கள் ஆங்கிலத்தில். கப்பல்கள் மூடுபனியிடையே செல்கையில் சில சமயங்களில் இந்த மிதக்கும் பனிக்கட்டிக் குன்றுகளின்மீது மோதிச் சேதப்படுவது கூட உண்டு.

இந்த மிதக்கும் பனிக்கட்டிக் குன்றுகளுக்குப் புதிய உபயோகம் ஒன்று கண்டுபிடித்திருக்கிறார்கள்



அமெரிக்காவிலே. இவற்றைக் கொக்கி போட்டுக் கப்பலுடன் சேர்த்துக் கட்டி இழுத்துக் கொண்டு செல்லலாம்; கலிபோர்னியா கடற்கரை ஓரமாகக் கொணர்ந்து நிறுத்தலாம்; பிறகு, இவற்றிலிருந்து பனிக்கட்டித் துண்டுகளை உடைத்தெடுத்து ஒரு தொழிலகத்துக்குக் கொண்டு சென்று உருக்கி, குடிநீராகக் குழாய்கள் மூலம் 'பம்ப்' செய்து ஊருக்குள் அனுப்பலாம். இந்தத் திட்டம் பற்றித் தீவிரமாக யோசனையும் ஆராய்ச்சியும் நடத்தி வருகிறார்கள். எப்படி, குடிநீர்ப் பிரச்னையைச் சமாளிக்கும் இந்த வழி!

போனார். தாரிணி தன் தாயாரின் கதியைப் பற்றி அறிந்து அளவில்லாத துயரமும் அவமானமும் அடைந்தாள். தாரிணியின் வருங்காலத்தைப் பற்றிச் சர்ச்சை நடந்தது. தாரிணி இல்வாழ்க்கையை ஏற்று நிம்மதியாக வாழ வேண்டும் என்று துரைசாமி ஐயர் விரும்பினார். ரமாமணியிடமிருந்து உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தபடியால் தாரிணியின் மனத்தை அறிய முயன்றார். அதற்கு முன்னாலேயே உங்களுக்கும் தனக்கும் பொருந்தாது என்ற சந்தேகம் தாரிணிக்கு இருந்தது. தாய் சிறை புகுந்த செய்திக்குப் பிறகு உங்களை மணந்து கொள்ளும் எண்ணத்தை விட்டுவிட்டாள். துரைசாமி ஐயரோ எல்லாவற்றையும் கேட்டு விட்டு மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டார். தாரிணி வாழ்க்கையில் ஆதரவின்றித் திரியாமல் உங்களை மணந்து சுகமாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். இந்தச் சமயத்தில் ராஜம்பேட்டையில் தங்களுக்கும் சீதாவுக்கும் கல்யாணம் நிச்சயமாகியிருந்தது. ஆகையினால்தான் அப்படித் தந்தி கொடுத்தார்...''

''சூரியா! அந்தத் தந்தியை நீ அதிகப் பிரசங்கித்தனமாக அமுக்கிவிட்டது எவ்வளவு பெரிய தவறு என்பதை இப்போதாவது உணருகிறாயா?'' என்றான் ராகவன்.

''மாப்பிள்ளை! நான் தவறு செய்ததாக ஒப்புக் கொள்ள மாட்டேன். கடவுளுடைய சித்தம் அவ்விதம் இருந்தது. இன்னமும் நான் சொல்கிறேன். உங்களுக்கும் சீதாவுக்கும்தான் பொருத்தம். தாரிணிக்கும் உங்களுக்கும் இலட்சிய ஒற்றுமை ஏற்பட்டிராது. உங்களுடைய இல்வாழ்க்கையும் வெற்றியடைந்திராது!''

''நானும் உன் அத்தங்காளும் வெகு ஆனந்தமான இல்வாழ்க்கை வெற்றிகரமாக நடத்தினோம் என்பது உன் எண்ணமாகும்!''

''ஆரம்பத்தில் அப்படித்தான் இருந்தது மாப்பிள்ளை! எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது. இப்போதும் ஒன்றும் மோசம் போய் விடவில்லை. சீதா தங்களிடம் வருவதற்குக் காத்திருக்கிறாள். ஏற்கனவே ஏதாவது தவறு நேர்ந்திருந்தாலும் அதையெல்லாம் மறந்துவிட்டு உங்களையே தெய்வமாகப் பாவிக்கக் கூடிய நிலையில் இருக்கிறாள். அத்தங்காளுக்கு ஒரு வரி கடிதம் எழுதிப் போடுங்கள். உடனே விரைந்து ஓடி வராவிட்டால் என்னைக் கேளுங்கள்.''

''சூரியா! நீ சொல்வது இந்த ஜன்மத்தில் நடக்கிற காரியம் அல்ல.




சீதாவை வரும்படி கடிதம் எழுதுவதைக் காட்டிலும் என்னுடைய கையையே வெட்டிக் கொண்டு விடுவேன். அவள் பட்டாபிராமனுக்கு வோட்டு வாங்கிக் கொடுத்துக் கொண்டு சுகமாக இருக்கட்டும். பட்டாபிராமனையே மறுமணம் செய்து கொள்ளட்டும்! விவாகரத்து கொடுக்க நான் தயார்!'' என்றான் ராகவன்.

''ஐயோ! அப்படிச் சொல்லாதீர்கள். சொன்னீர்கள் என்று தெரிந்தாலே சீதா பிராணனை விட்டு விடுவாள். நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள். போனதெல்லாம் போகட்டும். அதையெல்லாம் மறந்து விட்டு மறுபடியும் சீதாவுடன் இல்வாழ்க்கை ஆரம்பித்துப் பாருங்கள். நிச்சயமாக சந்தோஷமாக வாழ்வீர்கள். ராகவன்! நீங்களும் சீதாவும் அந்யோந்யமாக இல்லறம் நடத்தினால் அதைக் காட்டிலும் எனக்கும் தாரிணிக்கும் சந்தோஷம் அளிக்கக் கூடிய காரியம் வேறு ஒன்றும் இல்லை!''

ஏற்கனவே ராகவன் உள்ளம் எரிந்து கொண்டிருந்ததல்லவா? சூரியா தாரிணியின் பெயரைக் குறிப்பிட்டது எரிகிற தீயில் குங்கிலியத்தைப் போட்டது போலாயிற்று.

''சூரியா! உனக்கும் தாரிணிக்கும் சந்தோஷம் அளிப்பதுதான் என் வாழ்க்கையின் இலட்சியம் என்று உனக்கு எண்ணமா? நான் பிறந்து வளர்ந்தது எல்லாம் அதற்காகத்தானா?'' என்று சொல்லிக் கொண்டே சௌந்தர ராகவன் எழுந்து சூரியாவின் அருகில் வந்து நின்றுகொண்டான்.

''அடே! முட்டாள்! ஜாக்கிரதை! எனக்கு வீணில் கோபம் மூட்டாதே!'' என்று இரைந்து கத்திவிட்டுச் சூரியாவின் கன்னத்தில் 'பளீர்' என்று ஓர் அறை அறைந்தான்.

சூரியா கையை ஓங்கிவிட்டு உடனே கீழே போட்டான்.

## எதை நோக்கி?



ஓர் அமாவாசை இரவில் ஒரு கார், மெதுவாகச் சென்று கொண்டிருந்தது. அந்தக் காரின் முன்புறம் இரண்டு சிறிய விளக்குகளும், இரண்டு பெரிய விளக்குகளும் இருந்தன. சிறிய விளக்குகள் இரண்டும், 'மங்கலாக எரிவதாக' எதிரே வந்த ஒருவன் சொல்லவே காரோட்டி, காரை நிறுத்தி இறங்கினான்.

அவன் பெரிய விளக்குகளை நோக்கி, "அது என்ன, நீங்கள் மாத்திரம் வெளிச்சமாக எரிவது? சிறிய விளக்குகளின் ஒளியை நீங்கள்தான் பிடுங்கிக் கொண்டிருக்க வேண்டும். உங்களை என்ன செய்கிறேன், பார்!" என்று கூறி, அவற்றை அடித்து நொறுக்கினான்.

பிறகு அவன் காரிலேறி அமர்ந்து காரைக் கிளப்பினான்.

அமாவாசை இரவு —

விளக்கற்ற கார் —

காரோட்டி, காரை ஓட்டிக்கொண்டு போனான், ஒரு 'தீவிர முற்போக்கு சோஷலிஸ கீத'த்தைப் பாடியபடி.

எதை நோக்கி? எதை நோக்கி?

— ஆர். நீலதயாளன்

"ஏன் கையை ஓங்கிவிட்டுக் கீழே போட்டாய்? மகா வீரனாயிற்றே நீ!" என்றான் ராகவன்.

"மாப்பிள்ளை! முன்னேயாயிருந்தால் உங்களுடைய ஓர் அறைக்கு ஒன்பது அறை கொடுத்திருப்பேன். ஆனால் நானும் தாரிணியும் சமீபத்தில் எங்கள் கொள்கையை மாற்றிக் கொண்டோம். பலாத்காரத்தினால் பயன் சிறிதும் இல்லை என்று கண்டு, மகாத்மாவின் அஹிம்சா தர்மத்தை அனுசரிக்கத் தீர்மானித்திருக்கிறோம். அந்தத் தீர்மானத்துக்கு முதல் சோதனை தங்களால் ஏற்பட்டிருக்கிறது..."

"ஓஹோ அப்படியா? மகாத்மாவின் கட்சியைச் சேர்ந்து விட்டாயா? 'ஒரு கன்னத்தில் அடித்தவர்களுக்கு இன்னொரு கன்னத்தையும் காட்டு' என்கிற ஏசுநாதரின் போதனைதானே மகாத்மாவின் போதனையும்! அப்படியானால், இதையும் வாங்கிக்கொள்!" என்று இன்னொரு கன்னத்தில் இன்னொரு அறை அறைந்தான்.

சுளீரென்று கன்னம் வலித்தது. தலை முதல் கால்வரையில் அதிர்ந்தது. சூரியா பல்லைக் கடித்துக் கொண்டு, "உங்களுக்கு இப்போதாவது திருப்தி ஆயிற்று அல்லவா? மனம் குளிர்ந்து விட்டது அல்லவா? போய் வருகிறேன்!" என்றான்.

"எனக்கு இன்னும் திருப்தி இல்லை, அப்பனே! சுலபத்தில் என்னுடைய மனம் குளிர்ந்து விடாது!" என்று சொல்லி ராகவன் சூரியாவின் கழுத்தை இறுக்கிப் பிடித்துக் கொண்டான். "இதோ பார்! சூரியா! இனிமேல் தாரிணியையாவது சீதாவையாவது நீ பார்த்துப் பேசுவதில்லை என்று சத்தியம் செய்து கொடு. இல்லாவிட்டால் உன்னை இந்த நிமிஷமே கொன்றுவிடுவேன்!" என்றான்.

"மாப்பிள்ளை! நீங்கள் கேட்பது கொஞ்சம் கூட நியாயம் இல்லை. சீதாவை நான் பார்ப்பதில்லை என்று ஏன் சத்தியம் செய்ய வேண்டும்? என் மனத்தில் கல்மஷம் ஒன்றும் கிடையாது. தாரிணி விஷயத்தில் எந்த விதமான வாக்குறுதியும் நான் கொடுக்க முடியாது. நீங்கள் வேணுமானால் என்னைச் சுட்டுக் கொன்றுவிடுங்கள். சீதா அத்தங்காளும் தாரிணியும் உங்கள் தாயாரும் குழந்தை வஸந்தியும் உங்கள் காரியத்தைப் பற்றிச் சந்தோஷப்படுவார்கள். வாசலில் காத்திருக்கும் சி. ஐ. டி.க்காரனும் சந்தோஷப்படுவான்!" என்றான் சூரியா.

"அடே முட்டாள்! என்னை இப்படியெல்லாம் பயமுறுத்தலாம் என்று பார்க்கிறாய்?" என்று ராகவன் சொல்லிவிட்டுப் பூரண பலத்துடன் சூரியாவைப் பிடித்துத் தள்ளினான். சூரியா மச்சுப் படியில் உருண்டு கொண்டே போய் நடுவில் இருந்த திருப்பத்தில் சமாளித்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்தான்.

இதற்குள் சூரியா விழுந்த சத்தத்தைக் கேட்டுவிட்டு வஸந்தியும் அவள் பாட்டியும் ஓடி வந்தார்கள்.

"இதென்ன சூரியா மாமா! மச்சிலிருந்து விழுந்து விட்டாயா என்ன? ஐயையோ!" என்றாள் வஸந்தி.

"ஆமாம், கால் தடுக்கி விழுந்து விட்டேன்!" என்றான் சூரியா.

"வஸந்தி! சூரியா தடுக்கி விழுந்து விட்டான். நல்ல வேளையாக அதனால் மச்சுப் படிகளுக்குச் சேதம் ஒன்றும் ஏற்படவில்லை; படிகள் பிழைத்தன!" என்று ராகவன் கூறிவிட்டு, தன்னுடைய நகைச்சுவையை எண்ணித் தானே 'ஹோ!' என்று சிரித்தான். (தொடரும்)




அரங்கேற்றம் திரையிடப்பட்டுச் சர்ச்சைக்குரியதாகவும் ஆகிவிட்டது. முக்கியமான சர்ச்சை ''இந்தக் கதைக்குப் பிராமணக் குடும்பத்தைத் தேர்ந்தெடுத்திருப்பானேன்?'' என்பது.

வறுமையில் வாடும் ராமு சாஸ்திரிகளின் குடும்பம் பெரியது. வருஷத்துக்கு ஒரு வாரிசை அளித்துக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் எதிரியாக விளங்குகிறார் அவர். இதில் அவருக்குப் பூரண ஒத்துழைப்பைத் தரும் அவர் மனைவி. பெற்ற குழந்தைகளைப் பேணி வளர்க்க முடியாத வறுமை நிலையில் அவர்களை விஷமிட்டுக் கொல்லும் அளவுக்குத் துணிந்து விடுகிறாள். இதையறிந்த அவளது மூத்த மகள் லலிதா அவளைத் தடுத்துக் குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பைத் தான் ஏற்கிறாள். அதாவது பத்து வயிறுகளை நிரப்பும் பொறுப்பும், பல கோடி ஆசைகளை நிறைவேற்றி வைக்கும் நிர்ப்பந்தமும் அவள் தலையில் சுமக்க நேரிடுகிறது. அதற்காக அவள் தன் கற்பை இழக்க நேர்ந்தது தான் கொடுமையிலும் கொடுமை! அதனினும் கொடுமை அவள் தன் உடலையே விற்க நேர்ந்தது தான்!

கலாகேந்திராவின் புரட்சிப் படைப்பான ''அரங்கேற்றம்'' புதுமையான கதைப் போக்கையும், கசப்பான அடிப்படைக் கருத்தையும் கொண்டதுதான்! ஆனால் கதாசிரியரின் நோக்கம், யாரையும், எந்த மன உணர்ச்சியையும் புண்படுத்துவதல்ல. கதையின் கருத்தை விளக்குவதற்குத் தகுந்த பாத்திரங்களைப் படைக்க மேற்படி சமூகம் தான் ஏற்றதாயிருந்திருக்கிறது. இது அவலச் சுவையை ஆதரிக்கும் கதையல்ல. பார்ப்பவர்களைக் கண் கலங்கச் செய்து சமூகத்தின் இழி நிலைக்குச் சவுக்கடி கொடுத்து, பலருக்கு விழிப்பை ஏற்படுத்தும் கதை. மேலும் அந்தணர் குலத்தின் உயர்வை எடுத்துக் கூறும் பல நிகழ்ச்சிகள் புனையப்பட்டுள்ளன. பொருளாதார, சமூகத் துறைகளில் பிராமண சமூகத்தின் இழி நிலையை எடுத்துக் கூறுவதாகவும் பழைமையில் ஊறிய போக்கைக் கொஞ்சம் இடித்துக் காட்டுவதாகவும் கூட அமைந்திருக்கலாம்; ஆனால் அச் சமூகத்தை இழிவுபடுத்துவதாகக் கருத இடமில்லை. கதாபாத்திரங்களின் உன்னதமான குண இயல்புகள் அற்புதமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய மூன்று பொறுப்புக்களையும் திரு கே. பாலசந்தர் மிகவும் திருப்திகரமாக நிறைவேற்றியிருக்கிறார். அவருக்கே கைவந்த பாணியையும், சிறப்பான முத்திரைகளையும் படத்தில் பரவலாகக் காண முடிகிறது. வசனத்துக்குத் தனியாக ஒரு 'சபாஷ்' போட வேண்டும். 'ஸ்டார் வால்யூ' என்பதே இல்லாமல், அதைப் பற்றிக் கவலையும் படாமல் 'டைரக்ஷன் வால்யூ'வில் முழு நம்பிக்கை வைத்துப் பெரிய வெற்றி பெற்றிருக்கிறார். நடிகை பிரமீளா லலிதாவாக நடிக்க முழுத் தகுதியும் பெற்றவர்; சிரிப்பையும் கண்ணீரையும் மாறி மாறி எத்தனை அநாயாசமாக உதிர்க்கிறார்! பிரமீளாவின் நடிப்பு பிரமிப்புக்குரியது; படத்தின் நடுநாயகமாக விளங்குகிறார். ஆகா! நடிப்புத் திறமைதான் எங்கெல்லாம் ஒளிந்து கொண்டிருக்கிறது! வெளிக் கொண்டுவர பாலசந்தர்கள் பலர் தேவை, அவ்வளவுதான்!

ராமு சாஸ்திரியாகவும், அவர் மனைவியாகவும் நடித்த எஸ். வி. சுப்பையாவும் எம். என். ராஜமும் ஒருவருக்கொருவர் சளைக்காமல் அற்புதமாக நடிக்கின்றனர். சிவகுமாரையும் சுந்தரிபாயையும் மிக நன்றாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார் பாலசந்தர்.

''ஆண்டவனின் தோட்டத்திலே அழகு சிரிக்குது'' என்ற பாடல் நன்றாயிருக்கிறது.

''அரங்கேற்றம்'' பார்ப்பவர்களைச் சிந்திக்க வைக்கும் படம். கலபத்தில் கண்ணீர் சிந்தாதவர்கள்கூடக் கண் கலங்கவாவது செய்வார்கள்!

— காந்தன்

# சிவப்பு விளக்குக் கதைதான்; ஆனால் பச்சைக் கொடி காட்டலாம் தாராளமாக!

# ராஜாஜியின் ஜெயில் டைரி



## 1922 ஜனவரி, 25உ

சுயராஜ்யம் வந்த உடனே ஜனங்களுக்குச் சந்தோஷம் ஏற்பட்டு விடாது என்பதை நாம் எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும். நல்ல அரசாங்கமும் ஏற்பட்டுவிடாது. சுயராஜ்யம் பெற்று நீண்ட நாட்களுக்குப் பிறகும் இவை கிடைக்காது. தேர்தல்களும் அவற்றில் லஞ்ச ஊழலும், அநீதிகளும் செல்வத்தினால் ஏற்படும் அதிகார பலமும் கொடுமையும் நிர்வாகத்தின் திறமையின்மையும் சேர்ந்து சுதந்திரம் நமக்குக் கிடைத்தவுடனே வாழ்க்கையை நரகமாக்கி விடும். மக்கள் பழைய ஆட்சியை எண்ணி ஏங்குவார்கள். அந்த ஆட்சியில் ஒப்பு நோக்குகையில் தர்ம நியாயமும் திறமையும் அமைதியான, ஏறத்தாழ நேர்மையான நிர்வாகமும் இருந்தனவே என எண்ணுவார்கள். அடிமைப்பட்டுக் கிடக்கும் அவமானத்திலிருந்து இந்த மக்கட் குலம் மீட்கப்படுவது ஒன்றே நமக்குக் கிடைக்கக்கூடிய லாபம். எல்லோருக்கும் கல்வி அறிவு கிட்டச் செய்து, அதன் மூலம் நன்னடத்தை, கடவுளிடம் பயபக்தி, அன்பு முதலிய குணங்கள் மக்களிடம் குழந்தைப் பருவம் முதற் கொண்டே வளருமாறு செய்வது ஒன்றில்தான் விமோசனம் இருக்கிறது. இதில் நாம் வெற்றி அடைந்தால்தான் சுதந்திரம் மகிழ்ச்சி தரும். இல்லாது போனால் சுதந்திரம் என்பது கொடுமை மிக்க அநீதிகளும் செல்வத்தின் கொடுங்கோன்மையுமாக மாறிவிடும். எல்லோரும் தர்ம நியாயத்துடன் நடந்து கொள்பவர்களாகவும் கடவுளிடம் பய பக்தி கொண்டவர்களாகவும் மற்றவர்களிடம் அன்பு செலுத்துவதில் உள்ள சந்தோஷத்தை உணர்ந்தவர்களாகவும் இருந்தால் அடடா, இந்த உலகம்தான் எத்தனை அழகானதாக விளங்கும்! இத்தனையெல்லாம் எண்ணினாலும் கூட இந்த லட்சியம் வேறு நாடுகளில் நிறைவேறுவதைக் காட்டிலும் இந்தியாவில் நிறைவேறுவதற்கான சாத்தியக்கூறுகள் அதிகம் இருப்பதாகவே நான் கருதுகிறேன்.

புதன்கிழமை: சீக்கியக் கைதிகளுக்கு அவர்கள் இனத்தைச் சேர்ந்த நிதான்சிங் கோதுமைச் சப்பாத்திகள் செய்து கொடுக்கிறார். முஸ்லிம் கைதிகளுக்கு காங்கிரஸ் ஊழியர் ஷேக் முகம்மது செய்து கொடுக்கிறார். அவர்கள் இருந்த பகுதியில் வைசூரி கண்டிருப்பதால் அவர்களை இந்தப் பகுதிக்கு அனுப்பியிருக்கிறார்கள். நிதான் சிங்குக்கு இருமல் அதிகமாயிருக்கிறது. ஆயினும் ஆஸ்பத்திரியில் கொடுக்கும் மருந்தைக் குடிக்க மாட்டேன் என்கிறார். அவர்களைக் காலையில் நாலு மணிக்கு எழுப்பிச் சமையல் அறைக்கு அனுப்புகிறார்கள். நானும் எத்தனையோ சமையல்காரர்களை வைத்துக் கஷ்டப்பட்டிருக்கிறேன். ஆனால் இப்படி மனமுவந்து பணி செய்யும் சமையல்காரர்களை நான் இதற்கு முன் பார்த்ததில்லை. சமையல் வேலைக்கென்றே பிறந்தவர்கள் போல் பிராமணர்கள் காணப்படுகிறார்கள். ஆயினும் பிற பிறவிக் கலைஞர்களைப் போலல்லாது, வேலையைச் சரியாகச் செய்யாமலிருப்பதற்கே பிறந்தவர்களாகக் காணப்படுகிறார்கள்.

இந்தப் பகுதியில் வேலை பார்த்த காவல்காரர் பெருமாளைத் தாற்காலிகமாகச் சமையலறைக்கு அனுப்பியிருக்கிறார்கள். அதனால் வேறொருவர் வந்திருக்கிறார். இவர் ஒரு வாயாடி. பேசுவது அனைத்தும் பயனிலாச் சொற்கள்.

நூல் நூற்றேன். சோக்கிரதர், விசாரணையின்போது செய்த பிரசங்கத்தை மொழிபெயர்த்தேன். நான் சிறைக்கு வந்த பிறகும்கூட என்னை வருமான வரி உத்தியோகஸ்தர்கள் விட்டபாடில்லை. எனக்கு வரும் வருமானங்களையெல்லாம் எழுதி அனுப்பும்படி ஒரு ''ஃபாரம்'' அனுப்பி வைத்திருக்கிறார்கள்.



# கதை அரங்கு கண்டோம்!

தமிழகத்துக் கிராமப்புறங்களில் இரவு வேளைகளில் விளக்கேற்றி வைத்துப் பாரதக் கதைகளைப் பாவங்களோடு கூறும் வழக்கம் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. கதை கூறுபவர் பல பாகங்களை ஏற்று நடித்துப் பார்ப்பவர்களை உணர்ச்சி வசப்பட வைப்பார்.

இது போன்று பாவபூர்வமாக நடித்த வாறே நாடோடிப் பாடல்களின் வாயிலாகக் கதை கூறும் வழக்கம் உலகின் பல தேசங்களி லும் உண்டு.

இந்தத் தொன்மையான கலையில் நவீன நாடக பாணியின் பல உத்திகளையும் இணைத்து நாகரிகப்படுத்தி நாடகக் கலையில் புதியதொரு துறையையே உருவாக்கியிருக்கிறார் பீட்டர் கோ என்ற உலகப் பிரசித்தி பெற்ற டைரக்டர்.



பிரிட்டிஷ் கவுன்சிலின் ஆதரவுடன் இந்தியாவுக்கு வந்து கலாக்ஷேத்திரா மாணவ மாணவியருக்கு இக்கலையில் பயிற்சி தர அவர் தீர்மானித்தது தமிழகத்தின் அதிர்ஷ்டம்.

கலாக்ஷேத்திரா நடிக நடிகையர் மரமாகவும், நரியாகவும், விறகு வெட்டியாகவும், குதிரையாகவும் இன்னும் பலவாறுகவும் மாறி பாவபூர்வமாக நடித்துக் கதைகளை வளர்த்துக் கொண்டு போனுர்கள்.

பல தேசங்களிலும் வழங்கும் பிரபலமான ஏழெட்டு நாடோடிக் கதைகளைக் 'கதையரங்கில்' அரங்கேற்றம் செய்தார்கள். ஒவ்வொரு கதையிலும் மையமான கருத்துக்கு ஏற்ப அரங்க நிர்மாணங்களை மிக எளிய முறையில், ஆனால் பார்வையாளர்களின் கவனத்தில் பதியும் வகையில் உருவாக்கியிருக்கிறார் பீட்டர் கோவின் துணைவியாரான இங்கிபோர்க். பளிச்சென்ற வண்ணங்களான சிவப்பும் மஞ்சளும் என்னமாய்க் கைகொடுத்துக் களை யூட்டி இருக்கின்றன!

கதை சொல்லும் சூத்திரதாரியாக வருகிறுர் கிதார் வாத்தியத்துடன் ஜோ கிரிஃபித் என்பவர். 'கதை அரங்க' நிகழ்ச்சிகளுக்குப் பாட்டமைத்துப் பாடுபவரும் இவர்தான்.

பார்வையாளர்களான கதை கேட்கும்—இல்லை பார்க்கும் ரசிகர்களின் கவனம் சிதறி விடாமல் தம்பால் ஈர்த்துக் கொள்ளும் உத்தியைத் தயாரிப்பாளர் திறமையாகக் கையாண்டிருக்கிறுர். அரங்கத்தின் முன் னுலே மட்டுமல்லாமல் நாலா பக்கங்களி லிருந்தும் கதா பாத்திரங்கள் ரசிகர் களிடையே நுழைந்து பாடிப் பேசி வருவது நல்ல உத்தி. கலாக்ஷேத்திரா கதையரங் கில் ஒலி பெருக்கி கிடையாது. ஆனலும் கதாபாத்திரங்களின் உரையாடலை அரங் கின் கோடி வரை துல்லியமாகக் கேட்க முடிந்தது என்றுல் ரசிகர்கள் எத்தனை அமைதியாக, ஆர்வத்தோடு அமர்ந்திருந்தார்கள் என்பது தெளிவாகவில்லையா?

"கதாபாத்திரங்களை ஏற்கும் கலைஞர்கள் எப்படி நடிக்க வேண்டும் என்பதை பீட்டர் கோ அவர்கள் விளக்கிச் சொல்லும் விதமே சாதாரணப் பார்வையாளரை நடிகராக்கி விடும்" என்றுர் ஒத்திகைகளின்போது உட னிருந்து ரசித்த ஸ்ரீமதி ருக்மிணி தேவி. 'கதை அரங்கை'க் கண்டவர்களுக்கு இதை நம்புவது தவிர வேறு வழியில்லை.

கதையரங்கில் சொல்லப்பட்ட கதைகள் எல்லாம் ஆங்கிலத்திலேயே சொல்லப் பட்டன. இதையே தமிழில் தயாரிக்க முடியும். அப்போது அது இன்னும் பரவலாகப் பயன் தரும்.

— **கௌசிகன்**

# ஏழு முடிச்சுக்கள்

9

மாடிக்குச் சென்று பார்த்து விட வேண்டுமென்ற மோகன சுந்தரத்தின் சிந்தனையும் அதற்காக அவன் எடுத்துக் கொண்ட பகீரத முயற்சியும் பாதியில் அறுபட்டு, தடைப்பட்டு நின்றன. சற்றுமுன் அறுபட்ட பிரம்பு, கத்தி முனையில் பரணிலிருந்து ஊசலாடிக் கொண்டிருந்தது. அந்த ஊன்றுகோல்களை எடுக்கத் திரும்பவும் முயற்சி செய்ய வேண்டுமெனில் ஆரம்பத்திலிருந்து தொடங்க வேண்டும். அவன் என்ன சிலந்தியா? அல்லது சிந்தனையின் மூலம் தெளிவு பெற்ற ராபர்ட் ப்ரூஸா? இரண்டாவது முறை முயற்சி எடுப்பதையே அவன் மனம் தள்ளிப் போட்டது. பிறகு பார்த்துக் கொள்ளலாம்! ஆனாலும் மேலே ஆடிக் கொண்டிருக்கும் கத்தியை மட்டும் இப்போது அகற்றியாக வேண்டும். அதனை எவ்வாறு அகற்றுவது ?

நேரம் சென்று கொண்டேயிருக்கிறது. பைரவி வந்துவிட்டால் அவளுடைய பார்வையில் அது நிச்சயம் பட்டுவிடும்! அவள் என்னவெல்லாமோ நினைப்பாள்! இல்லாத கேள்விகளை எழுப்புவாள். பதில் சொல்லி மழுப்ப வேண்டியதாய்ப் போய் விடும். அவள் விழித்துக் கொள்வாளேயானால் பிறகு தேடிக் கொண்டிருக்கிற உண்மை புலனாகாமலும் போகலாம் ! பிறகு என்றுமே அவனால் உண்மையைக் கண்டு பிடிக்க முடியாது!

என்ன நினைத்தானோ... மேசை டிராயரைத் திறந்தான். அங்கே சின்னஞ் சிறு புகைப் பட உருவில் பைரவி இருந்தாள். இரண்டு மாதங்களுக்கு முன் எடுத்தது. பைரவி வேலைக்குப் போன பிறகு அவளுடைய நினைவு மோகனசுந்தரத்தின் நெஞ்சில் அடிக்கடி எழும். அப்போதெல்லாம் மனைவியை நெஞ்சோடு நெஞ்சாக வைத்து ரசிக்க இப்படி ஒரு புகைப்படத்தை எடுத்துத் தரச் சொன்னான். அவனுக்குத்தான் மனைவியின்மீது எவ்வளவு பற்று. எவ்வளவு பாசம்...

எல்லாமே அற்று வேஷமாய்ப் போய்விட்டனவோ ? இன்னும் அவனால் முடிவுக்கு வர முடியவில்லை. அந்த முடிவாகிய அந்த முதல் முடிச்சு — சந்தேக முடிச்சு இன்று அவிழப் போகிறது ! தெய்வமே...

அவிழ்கிற முடிச்சு அமங்கலமாய்ப் போய்விடக் கூடாது !

ஆகா ! இன்னமும் மனைவியின் மீது அவனுக்கு ஆசை கிரீடம் தரித்துக் கொண்டிருக்கிறது...... !

அது சரி, முதலில் பரணிலிருந்து ஊசலாடும் இந்தக் கத்தி விழுந்து தொலைய வேண்டுமே! என்ன செய்வது?

பளிச்சென்று ஒரு யோசனை— மின்னல்வேகத்தில் தோன்றியது.

மேலே மின்சார விசிறி மிகவும் மெதுவாகச் சுழன்றுகொண்டிருந்தது. அதனை வேகப்படுத்திப் பார்த்தால் என்னவாகும் ? செய்துதான் பார்ப்போமே ! நாற்காலி நகர்ந்தது....

கடகடத்த சத்தத்துடன் வேகமாகச் சுழன்ற மின்விசிறியின் காற்றால் பேனாக் கத்தியைத் தாங்கிய மெல்லிய பிரம்பு வேகமாக ஆடத் தொடங்கியது. சற்றைக்கெல்லாம் கத்தியைத் தாங்கிய அந்தச் சிறு பிரம்பு தனது பிடிமானத்திலிருந்து விடுபட்டுக் கொண்டது. நேராகப் பரணுக்குக்

கே. பாலசந்தர்

கீழே விழும் என்றுதான் நினைத்திருந்தான். ஆனால் காற்றின் வேகத்தின் காரணமாகச் சற்றுத் தள்ளி மேசையின் மீது விழுந்து, அந்த வேகத்தில் பிரம்பு கழன்று கொள்ள, கத்தி 'சரக்'கென்று குத்திட்டு நின்றது.

ஆம்! மேசையின் மீது அவன் வைத்துவிட்டு வந்த பைரவியின் புகைப்படத்தின் மீதுதான் கத்தி குத்திட்டு நின்றது.

அவனது அங்கங்கள் அத்தனையும் மின்சார 'ஷாக்' அடித்ததைப் போன்ற ஓர் உணர்வு!

கத்தி முனையின் சமிக்ஞை, ஏதோ ஒன்றை முன்கூட்டி அறிவிப்பது போலப் புலப்பட்டது அவனுக்கு !

புகைப்படத்தை மேசையறையில் போட்டுவிட்டுக் கத்தி முனையைக் கூர் பார்த்தவண்ணம் பைரவியின் வருகையை எதிர்நோக்கினான்.

அந்தியெனும் சிவப்பழகி வானரங்கில் மாலை நடம் புரியத் தொடங்கி விட்டாள் !

கைப் பையைத் தாங்கிக் கொண்டு உள்ளே நுழைந்து கொண்டிருந்தாள் பைரவி.

மேசையருகில் கணவன், கையில் கத்தியுடன் அமர்ந்திருப்பதைக் கண்டாள். ஒன்றையும் கேட்டுக் கொள்ளாமல், கைப் பையைத் திறந்து சம்பள நோட்டுக்கள் அடங்கிய உறையை எடுத்து நீட்டினாள். முதல் தேதியன்று சம்பளத்தைக் கணவனிடம் கொடுத்துத் திரும்ப வாங்கி வைப்பது அவளுடைய பழக்கம் !

முன்பெல்லாம் மனைவி இப்படிச் சம்பளத்தை நீட்டுகிறபோது ஆனந்தமாகப் பெற்ற அவனுடைய கரங்கள் இப்போது தொடவே நாணப்பட்டன. சம்பளம் அடங்கிய அந்த உறையைப் பார்க்கக் கூடக் கண்கள் கூசுவனவாகத் தெரிந்தது. கேவலம் ஊமையும் குருடியுமாகச் சேர்ந்து சம்பாதிக்கிற சமுதாயத்தில் கால் ஒடிந்துவிட்டதாலேயே நான்கு சுவர்களுக்குள் அடைபட்டுவிட்டோமே என்கிற தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டது ஒருபுறமிருந்தாலும், பைரவியின் நிழலில் களங்கம் நர்த்தனமிடுவதாக அவனுடைய சந்தேகம் வேறு கூனிக் குறுகச் செய்தது.

மோகனசுந்தரம் எதையும் பேசிக் கொள்ளவில்லை. டீப்பாயைக் காட்டித் தலையசைத்தான். சம்பள உறையை டீப்பாய் மீது வைத்துவிட்டு, பைரவி உள்ளே சென்றுவிட்டாள், உள்ளக் குறுகுறுப்புடன். 'உண்டு முடியட்டும்; பார்த்துக் கொள்ளலாம்' என்று வாளாவிருந்தான் மோகனசுந்தரமும்.

சம்பளப் பணத்தைத் தாங்கிய உறை பைரவி என்ற பெயரால் டீப்பாயின் மீது சிரித்துக் கொண்டிருந்தது. அந்த நேரம் பார்த்து, பண முடிச்சுத் தம்பதிகள் கலகலவென்று சிரித்துக் கொண்டே உள்ளே நுழைந்து கொண்டிருந்தனர் !

'' வணக்கம், மிஸ்டர் மோகனசுந்தரம் !''

வருகை தந்த அந்த விசித்திரமான பொதுசேவைத் தம்பதியை அந்த மனநிலையிலும் கரம் கூப்பி வரவேற்றான் மோகனசுந்தரம். வந்தவர்களை அமரச் சொல்ல வேண்டியதில்லை ; அவர்களாகவே அமர்ந்து கொண்டனர். டீப்பாயின் மீதிருந்த உறை அவர்கள் கண்களை உறுத்தியது.

''உங்கள் மனைவி வந்துட்டாங்கன்னு நினைக்கிறோம்!'' — திருப்பதி இழுத்தான். மோகனசுந்தரம் வெறுமையாகச் சிரித்துக் கொண்டான். பிறகு கேட்டான். ''இப்ப நீங்க பண முடிச்சுத் தரப் போவது அந்த இரட்டைப் பெண்மணிகளுக்குத்தானே ?''

மிகுந்த ஆர்வத்துடன் கேட்டான் மோகனசுந்தரம். என்னமோ அந்த இரட்டைப் பெண்மணிகளின் அபூர்வ வாழ்க்கை மோகனசுந்தரத்துக்கு ஒரு புதிய விழிப்பை அடிக்கடி தோற்றுவித்துக் கொண்டிருந்தது.

ஆண்டாள் புரிந்து கொண்டாள் :

''ஆமாங்க! முதல்லே அவங்களுக்குக் கொடுத்தாத்தான் தேவலை போலத் தோணுது.''

இரட்டைப் பெண்களைப் பற்றி மேலும் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற கிளர்ச்சி ஏனோ மோகனசுந்தரத்தின் நெஞ்சில் எழுந்தது. இப்படியும் பெண்களுள் இருக்கிறார்களா? பைரவியும் பெண்தான்; இவர்களும் பெண்கள் தாமே ?

''அந்த இரட்டைப் பெண்மணிகளை நீங்க பார்த்திருக்கீங்களா?''

''நல்லா கேட்டுட்டீங்க, சார்! பார்க்காத ஒருவருக்குப் பண முடிச்சா? கீழ்ப்பாக்கத்துலே டேவிட்ஸன் என்கிற வெள்ளைக்காரத் துரை பங்களாவிலே வேலை பார்க்கிறார்கள்.''

''என்ன வேலை செய்கிறார்கள்?''

''சொன்னால் 'ஷாக்' அடித்தது போல் இருக்கும்!''

''ஏற்கனவே 'ஷாக்'கை உணர்ந்துவிட்டவன் நான்! மேலே சொல்லுங்கள்! என்ன வேலைபார்க்கிறார்கள்?''

''பங்களாவில் காவல் வேலை! இரவு பகல் எந்நேரமும்!''

''வாட்ச்மேன்? குருடியும்செவிடுமா?''



உண்மையிலேயே மறுபடியும் ஷாக் அடித்தது மோகனசுந்தரத்துக்கு.

''வாட்ச்மேன் இல்லே; வாட்ச் கேர்ல்ஸ்!'' என்று சொல்லிவிட்டுக் கடகடவெனச் சிரித்தான் திருப்பதி!

''நம்பவே முடியலையே! ஆச்சரியமாயிருக்கே!'' என்று மோகனசுந்தரம் ஆர்வத்துடன் கேட்டான்.

இதுலே ஆச்சரியப்படறதுக்கு என்ன இருக்கு? ஒருத்தி செவிட்டு ஊமையாயிருந்தாலும் அவளுக்குக் கண் இருக்கு! யாரும் காம்பவுண்டுக்குள்ளே வர முடியாது! இன்னொருத்திக்குக் கண்களில்லே. வாயும் காதும் இருக்கு! கொஞ்சம் சத்தம் கேட்டாலும் அவள் உஷாராயிடுவா! எப்படிப் பார்த்தாலும் ரெண்டு பேருக்கும் நாலு கைகளாச்சே! திருடன் வந்தாலும் தப்பியோட முடியாது. அதுவும் ரெண்டு பெண்கள் சேர்த்துக் கட்டிய பிறகு எந்தத் திருடனுக்குத்தான் தப்பி ஓட மனசு வரும்?''

'உர்'ரென்ற பார்வையுடன் ஆண்டாள் நோக்கினாள். திருப்பதி வாயை மூடிக் கொண்டான். மோகனசுந்தரம் சிரித்துக் கொண்டான். என்றாவது ஒரு நாள் அந்த இரட்டைப் பெண்களைக் கண்டு — விசித்திரமான அவர்களுடைய வாழ்க்கையைப் பார்த்து ஆச்சரியப்பட வேண்டும் போலத் தோன்றியது. உண்மையிலேயே அபூர்வப் பிறவிகள் தாம்! கேவலம் ஒரு கால் முடமானதாலேயே உலகமே முடமாகிவிட்டதாக எண்ணிய மோகனசுந்தரத்தின் நெஞ்சில், 'உலகம் முடமாகவில்லை; மனம் தான் முடமாகி விட்டது' என்கிற உண்மையை எழுதிவிட்டார்களே அந்த இரட்டைப் பெண்மணிகள்.

''நேரமாகிறது; நாங்கள் வேலையோடு வீடு திரும்பினால் நல்லாயிருக்கும்!'' என்று ஆண்டாள் இழுத்தாள்.

அவர்களுக்கு எத்தனை பணம் கொடுத்தாலும் தகும் என்று தோன்றிவிட்டது, மோகனசுந்தரத்துக்கு. உண்மையில் அவர்களுக்குப் போய்ச் சேர வேண்டுமே!

ஒரு பகுதியாவது போய்ச் சேராதா என்ற நம்பிக்கைதான்.

திருப்பதி மலைக்கு ஒரு நண்பர் போகிறார். நம்மால் போக முடியவில்லை; திருப்பதி உண்டியலில் பத்து ரூபாய் போட்டுவிடுங்கள் என்று சொல்லி நம் கையிலிருந்து பத்து ரூபாய் கொடுக்கிறோம். தெய்வ காரியம்; அவர் நிச்சயமாக அந்தப் பத்து ரூபாயை உண்டியலில் போட்டுவிடுவார் என்கிற நம்பிக்கைதானே!

வந்திருக்கிற நண்பரின் பெயரே திருப்பதி! தில்லுமுல்லு எதுவும் செய்யமாட்டார் என்ற நம்பிக்கை மோகனசுந்தரத்துக்கு ஏற்பட்டுவிட்டது.

மேப்பாயிலிருந்த உறையைச் சுட்டிக் காட்டி, ''அதுலே பணமிருக்கு! உங்களுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு எடுத்துக்கலாம்'' என்றான்.

திருப்பதியை ஆண்டாள் நோக்க, ஆண்டாளைத் திருப்பதி நோக்கினான்.

''எடுத்துக்குங்களேன்.''— ஆண்டாள் அதட்டினாள். திருப்பதிக்கு இன்னுமா புரியாமல் இருக்கும்?

உறையைத் திறந்தான். மூன்று நூறு ரூபாய் நோட்டுக்கள்; ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்கள். எதை விட்டு வைத்து எவ்வளவு எடுத்துக் கொள்வது?

ஒரு விநாடி தயக்கம். அடுத்து— அனைத்தையும் எடுத்துக் கொண்டு காலி உறையை மேசையின் மீது வைத்து விட்டு, ''ரொம்ப நன்றி; அந்தக் காலத்துப் பாரி வள்ளல் உங்ககிட்ட என்ன செய்ய முடியும்?'' என்று தோத்திரம் பாடினான்.

ஆண்டாள் எழுந்து கொண்டாள். மேலும் தயங்க அவளுக்கென்ன பைத்தியமா? ''மெனி தாங்க்ஸ் ஸார்!'' என்று கூறியவாறு திருப்பதியை நோக்கினாள். திருப்பதி கை கூப்பியவாறு எழுந்து மனைவியைப் பின்தொடர்ந்து சென்றான்.

பைரவி என்று ஆங்கிலத்தில் பெயர் எழுதப் பெற்ற அந்த வெற்று உறை மோகனசுந்தரத்தை நோக்கிச் சிரித்தது.

இரவு உண்டு முடித்தாய்விட்டது. வழக்கம்போல் பைரவி மாடியறையில் டைப் அடிக்கத் தொடங்கிவிட்டாள்.

இரட்டைப் பெண்மணிகளைப் பற்றிய செய்தி ஒரு முறை கண் முன் விரிந்தது. தட்டெழுத்து யந்திரத்தின் சங்கிலியான ஓசை காதுகளை நிரப்பியது. பைரவிதான் டைப் அடிக்க வேண்டுமா? நமக்கு இரண்டு கைகள் இருக்கின்றனவே! அவை முடமாகவில்லையே! வீட்டோடு இருந்து இதுமாதிரியான தொழில்களை ஆனந்தமாகச் செய்து மகிழ்ச்சியுடன் வாழலாமே! குருடிக்கும் ஊமைக்கும் பிழைக்கத் தெரிந்தபோது நமக்கு என்ன வந்துவிட்டது!

ஓ..... தெய்வமே! சந்தேகம் தீர இப்போது நான் இறங்கப் போகிற விஷப் பரீட்சை அமுதமாக முடிந்து விடுமேயானால்......

இனி வாழ்க்கை சொர்க்கம்தான்!

பைரவி என் முன்னால் தூயவளாகத் தெரிய வேண்டுமே!

மோகனசுந்தரத்தின் மனம் பேயாக அலைந்தது. தட்டெழுத்து யந்திரத்தின் ஓசை பிரமையில் படிப்படியாய் அதிகரித்துத் தலைவேதனை தந்தது.

அவளுக்குத் தெரியாமல் இப்பொழுதே மாடிக்குச் சென்று பார்த்து விட வேண்டும்!

எப்படியிருந்தாலும் இன்று இரவே அவனுக்கு விடுதலை கிடைக்க வேண்டும்;

# இந்தக் கோடையில் உங்கள் கண்மணியை வேர்க்குருவிலிருந்து காப்பாற்றுங்கள்.

**நைஸில்**

தூவி நாள்தோறும் பராமரியுங்கள்

வேர்க்குரு மற்றும் இதர சரும எரிச்சல்களிலிருந்து தப்பும் இன்பக் குடும்பங்கள் எத்தனை இல்லை! நீங்களும் நாள் தோறும் நைஸில் உபயோகித்து இன்புற்றிருங்கள்!

- நைஸில், வியர்வையை மிக நன்றாக உறிஞ்சுகிறது. வேர்க்குருவைத் தடுக்கிறது
- மருந்து கலந்த நைஸில் அரிப்புகளிலிருந்து இதமளித்து, நோய்த் தொற்றைத் தடுக்கிறது
- நைஸிலில் ஒரு சக்திவாய்ந்த நச்சு முறிப்புப் பொருள்—க்ளோர்ஃபெனெஸின் உள்ளது. அது துர்நாற்றத்தை விளைவிக்கும் கிருமிகளைக் கொல்லுகிறது.

நாள்தோறும் நறுமணமுள்ள நைஸில் உபயோகிக்கும் பழக்கத்தை உங்கள் குடும்பத்திலுள்ள அனைவருமே மேற்கொள்ளட்டும்.




க்ளோர்ஃபெனெஸின் கலந்த

# நைஸில்

நறுமணமுள்ள, மருந்து கலந்த பவுடர்—**க்ளாக்ஸோ** தயாரிப்பு

ASP-G-N-2 TAM

# உங்கள் எல்லாத் தலைவலிகளையும்




# ஒரே ஒரு ஸாரிடான்

டிரேட் மார்க் 'ரோஷ்'

# போக்கிவிடுகிறது.

உங்கள் தலைவலியின் காரணம் எதுவாயினும் சரி, கைவசம் ஸாரிடான் வைத்திருங்கள். தலைவலி, உடம்புவலி, பல்வலி, அசௌகரியமான தினங்களில் ஏற்படும் வலி இவைகளால் ஏற்படும் சோர்வைப் போக்கும் வகையில் ஸாரிடான் விசேஷ கலவை முறையில் தயார் செய்யப் பட்டுள்ளது. சோர்வை நீக்கிப் புத்துணர்வு அளிக்கிறது. அதுவே ஸாரிடானின் தனிச்சிறப்பு—அது உங்களைத் துடிப்புடனும், மகிழ்ச்சியுடனும் வைக்கிறது.

ஸாரிடான் நிவாரணமளிக்கிறது. சோர்வை நீக்குகிறது. புத்துணர்வூட்டுகிறது.




ஒரே ஒரு ஸாரிடான் போதும்
ஒரு 'ரோஷ்' தயாரிப்பு

RP 3036

ஒன்று சந்தேகத்திலிருந்து ! இல்லையெனில் ? அவளிடமிருந்து !

படுக்கையிலிருந்து மெல்ல எழுந்து சக்கர வண்டியில் அமர்ந்து நகர்த்தினான். அது மெல்லியதாகக் கிறீச்சிடத் தொடங்கியது. ஆனாலும் அதிகமாகக் கேட்காதவாறு பார்த்துக்கொண்டான்.

முன்பு செய்தது போலவே ஆனால் இம்முறை உறுதியாக பேனாக் கத்தியும் பிரம்பும் துணை கொண்டு அலகு தயாரித்தான். ஊன்றுகோல்களைக் கொக்கி போட்டு இழுக்கும்போது அவை கீழே விழுந்து சத்தப்படுத்திப் பைரவியை எச்சரிக்காதிருக்க மெத்தை ஒன்றைத் தரையில் விரித்தான். இம் முறை அவனுக்கு முழு வெற்றி கிட்டியது.

நெஞ்சு படபடத்தது. ஒரு முறை 'குப்'பென்று வியர்க்கவும் செய்தது. மெல்ல ஊன்றுகோல்களைத் தாங்கிய வண்ணம் ஹாலில் நடந்து பார்த்துக் கொண்டான்..... சற்றுக் கடினமாகத்தான் இருந்தது ! ரொம்ப நாட்களாக அவற்றை உபயோகப்படுத்தாமல் இருந்ததனாலோ !

பூனை போல் அடி மேல் அடிவைத்து மெதுவாக மாடிப் படியிடம் வந்துவிட்டான் ! இரண்டு படிகளை ஏறிவிட்டான் ! தட்டெழுத்து யந்திரம் சத்தமிட்டுக் கொண்டிருந்தது. தெய்வமே ! பைரவி நிரபராதியாக இருக்க வேண்டுமே !

ஒரு நியாயமான கணவனின் பிரார்த்தனையாகவே அது இருந்தது.

ஒவ்வொரு படியையும் கடக்கிறபோதெல்லாம் பைரவி தன்னை விட்டு வெகு தொலைவில் எங்கோ, எங்கோ ஓடிக் கொண்டிருப்பதாகவே மனம் அலை மோதியது. அவ்வாறெல்லாம் ஏதும் நிகழக் கூடாதே என்று இதயம் துடித்துக் கொண்டிருந்தது.

மாடிக்கு வந்து எத்தனை நாட்களாயிற்று! ஊன்றுகோல்களின் சத்தம் சற்றும் கேட்காதவண்ணம் அடி மேல் அடி வைத்து நடந்தான்... ''வராந்தா'' வைக் கடந்து வலதுபுறம் திரும்பினால் அவளது அறை! திரும்பியும் விட்டான்! அவளது அறைக்குச் செல்லும் வாசற்படி அருகில் என்ன அது ? ஒரு சிறிய டூப்பாய்! அதன்மீது?

டக்டக்....டகடக....டக்டக்....

இந்தச் சத்தம் அதிலிருந்துதான் வந்து கொண்டிருக்கிறது. ஆம், அது ஒரு டேப் ரிகார்டர் !

பைரவி.....

புலன்கள் எரிமலையாய் வெடிக்கின்றன !

பேயாக அலறிவிடலாம் போலத் தோன்றுகிறது மோகனசுந்தரத்துக்கு.



பைபிள் முழுதுமோ அல்லது அதன் சில பகுதிகளோ 1473 மொழிகளில், வட்டார பாஷைகளில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளதாகத் தேசிய பூகோள கழகம் அறிவிக்கிறது.
பி. எஸ்.

அவன் என்னவெல்லாம் பிரார்த்தனை செய்து கொண்டானோ, எப்படியெல்லாம் இருக்கக் கூடாது என்று நினைத்தானோ அனைத்துக்கும் பங்கம் ஏற்படுவது போல் அந்த டேப் ரிகார்டர் சுழன்று கொண்டிருந்தது — அவனைச் சுழற்றி விட்டது !

முதல் பொய்யை நேருக்கு நேராகச் சந்தித்து விட்டான் !

இங்கே ஏதோ இரகசியமாக நடக்கிறது. அது என்ன ?

பிளந்து கொண்டிருந்த மார்பைப் பிசைந்தவண்ணம் கதவண்டை சென்று கவனித்தான். தாழிடப்பட்டிருந்தது. சற்றே தள்ளியிருந்த ஜன்னலை நாடிச் சென்றான். ஒரு பக்கத்துக் கதவு கொஞ்சம் திறந்து காணப்பட்டது. அதனுள் கண்களைச் செலுத்தி உற்றுக் கவனித்தான். 'ஸீரோவாட்டின்' மெல்லிதான வெளிச்சம். 'டேபிள் ஃபேன்' சுழன்று கொண்டிருக்கும் சத்தம்! மற்றபடி கிசுகிசுப்பது போன்ற பேச்சுக் குரல்! ஊடே கிளுகிளுப்பது போன்ற மெல்லிய நகையொலி! இந்தச் சத்தங்களைத்தான் டேப் ரிகார்டரின் தட்டெழுத்து ஒலி விழுங்கிக் கொண்டிருந்தது!

கதவைக் கொஞ்சம் தள்ளி மெதுவாகத் திறந்து பார்த்தான். பைரவி கட்டிலில் படுத்துக் கொண்டிருப்பது தெரிய வந்தது. அவளுடைய முகத்தை இரண்டு அந்நிய கரங்கள் வருடிக் கொண்டிருந்தன.

ஐயோ ! எரிமலையாகக் குமுறியது அவன் நெஞ்சம் ! இதயமே நின்று விடும் போலத் தெரிந்தது. ஆனாலும் திடம் கொண்ட மட்டும் தேற்றிக் கொண்டான். ஒரு துணிவு நிறைந்த ஆண் மகனாவே — அதே நேரத்தில் பலவீனப்படாத இன்ஸ்பெக்டராகவே மாறிப் பொறுமையாகக் கவனித்தான். தன்னைப் பல நாட்களாவே தயார் செய்து வைத்துக் கொண்டதன் பலன் தானோ என்னமோ! பயங்கர அமைதியும் நிதானமும் அவனிடம் காணப்பட்டன !

பைரவி தன்னை யாருடனோ சங்கமித்துக்கொண்டிருக்கிறாள்! யாருக்காகவோ அவளுடைய கற்பு அழுது கொண்டிருக்கிறது. ஏமாற்றத்தின் எல்லைக்கே சென்றுவிட்ட அவன் 'பைரவி' என்று கூக்குரலிடவில்லை! மெல்ல நகர்ந்தான்.

டேப் ரிகார்டரை அணுகினான். அதை எப்படி நிறுத்துவது என்று அவனுக்குத் தெரியவில்லை. அதில் பல 'ஸ்விட்ச'கள் இருந்தன. மின்சாரத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் 'பிளக்'கைப் பிடுங்கி விட்டான். சுற்றிக் கொண்டிருந்த 'டேப்' நின்றது.

மறுபடியும் சன்னலண்டை வந்து நின்று அந்த இடைவெளியின் வழியாக உள் பக்கம் ஊன்றிக் கவனித்தான் மோகன சுந்தரம். அவளது முகத்தை வருடிக் கொண்டிருந்த அந்தக் கை சட்டென்று நின்றது. ஒலி நின்று விட்டதைச் சற்றுத் தாமதமாகப் புரிந்து கொண்ட பைரவியின் முகத்தில் ஒரே நேரத்தில் பல கேள்விக் குறிகள் இழையோடின.

பைரவி படுக்கையை விட்டு அவசரம் அவசரமாக எழுந்தாள்!

மோகனசுந்தரம் பார்த்துக்கொண்டே இருந்தான்.

கதவு திறந்தது! களங்கம் தெரிந்தது! ஆமாம்; பைரவிதான் எட்டிப் பார்த்தாள்! 'வீல்' எனக் கூச்சலிட்டு விட்டாள்!

ஊன்றுகோல்களுடன் அரக்கனைப் போல் கண் சிவந்த கோலத்துடன் நின்று கொண்டிருந்த கணவனைக் கண்டதும், விதிர்விதிர்த்துப் போனாள் பைரவி. எது நிகழாது என்று அவள் திட்டவட்டமாக நம்பியிருந்தாளோ, அது ஊன்றுகோல்களின் உதவியுடன் நடந்து விட்டது!

பின்புறமாக இரண்டு அடி எடுத்து வைத்தாள். அதற்குள் அறையினுள் ஒரு சலசலப்பு கேட்டது. தொடர்ந்து ஓர் உருவம் வெளியேறுவது நிழலாகத் தெரிந்தது. சற்றைக்கெல்லாம் கொல்லைப்புறமாக இருந்த சுழற் படிக்கட்டுகளில் யாரோ தடதடவென்று இறங்கி ஓடுவது புலனாயிற்று.

யார் அவன்? கேட்க நினைத்தான்! ஆனால் கேட்கவில்லை! அது தேவையும் இல்லை.

கட்டிலின் மீது 'டை'யொன்று நாகப் பாம்பு போலச் சுருண்டும் நெளிந்தும் காணப்பட்டது. பட்டைக் கோடுகளை உடைய அந்த 'டை'யை எடுத்தான் மோகனசுந்தரம். பைரவியின் கழுத்தில் சுற்றி ஒரு முடிச்சுப் போட்டுப் பற்களை நறநறவென்று கடித்தான். பைரவி அரண்டு மருண்டு 'வீல்' என்று கத்தினாள். அடுத்த கணம் அவளுடைய குரல் அடங்கி விட்டது. டையின் இரு முனைகளைப் பற்றிப் பலம் கொண்ட மட்டும் இழுக்க முனைந்தான் மோகனசுந்தரம். மன முடிச்சு இன்று அவிழ்ந்தது; டையின் முடிச்சு இறுகியது.

பைரவியின் கண்கள் பிதுங்கி மின்னின! முடிச்சு இறுக இறுக.... அவனது கண்களில் பொங்கிய உக்கிரம் குறைய ஆரம்பித்தது!

'இது தேவைதானா? இது தேவைதானா?' என்று மனம் ஓலமிட்டது. இவளைக் கொல்ல நீ யார்? நீ ஓர் இன்ஸ்பெக்டர். குற்றவாளிகளைப் பிடிக்கலாம். தண்டிக்கிற அதிகாரம் நீதிமன்றத்துக்கே உரியது....! பல தத்துவ மேதைகளின் உருவங்கள் அவனது கண்களில் தோன்றி மறைகின்றன!

''பெண்ணைக் கொலை செய்பவன் பேடியினும் கேவலமானவன்.''

யாரோ எழுதியது அவன் நினைவுக்கு வருகிறது.

'டை'யின் முடிச்சு தளர்கிறது.

உதடுகள் 'துரோகி' என்கின்றன. ஆனால் ஓசை வெளிவரவில்லை.

கண்ணீர் மல்கும் கண்களை மூடிக் கொண்டான் மோகனசுந்தரம். வலக் கரத்தினால் இரண்டு முறை சமிக்ஞை செய்தான்! ஆம்! 'பிழைத்துப் போ' என்றது போலிருந்தது அது! ஏதோ சொல்வதற்காக வாயைத் திறந்தாள் பைரவி! மன்னிப்புக் கேட்கவா? ''என் முன்னாலே நிற்காதே! ஓடிப்போயிடு!''

வீடே அதிர்ந்துவிடும்படி கத்தினான் மோகனசுந்தரம்!

பைரவி ஓட ஆரம்பித்தாள். முடிச்சிலிருந்து தப்பித்துக் கொண்டவளாயிற்றே!

அவளுடைய கழுத்தில் முதல் முடிச்சுடன் இருந்த 'டை' அப்படியே இருந்தது. மாடிப் படிகளை இரட்டை இரட்டையாகத் தாவி இறங்கி ஓடினாள்! ஹாலிலிருந்த டீப்பாய் மீது சம்பளம் வாங்கி வந்த வெற்றுறை.

அந்த வெற்று உறையில் சம்பளம் அப்படியே இருப்பதாக நினைத்தாளோ என்னவோ! அதனை எடுத்துக் கொண்டு கதவைத் திறந்து ஓட்டம் பிடித்தாள்! ஓடினாள், ஓடினாள்....

எங்கு ஓடினாள்? யாரை நாடி ஓடினாள்? அவளுக்கே தெரியாது!

கண்கள் கலங்க, உதடுகள் துடிக்க, காலமெல்லாம் கண்ட கனவுகள் உடலை வியர்வையாய் நனைக்க மோகன சுந்தரம் அதுவரையில் எண்ணுமலிருந்த மாடிப் படிகளை எண்ணிக் கொண்டே இறங்கினான்.

அவன் மனைவி அவனைவிட்டு ஓடினாள்.

அதே நேரம் ஊனத்தைப் பற்றிய தாழ்வு மனப்பான்மை அவனைவிட்டு ஓடிக் கொண்டிருந்தது!

**[அடுத்த இதழில்
இரண்டாவது முடிச்சு தொடங்கும்.]**



# ஏர்-இந்தியா

## ஏர் ஹோஸ்டஸ் வேலைக்கு

### விண்ணப்பங்களை வரவேற்கிறது

ஏர்-இந்தியா உலகத்தின் பற்பல கவர்ச்சிமிக்க நகரங்களுக்கு அனுப்புவதுடன் சிறந்த பயிற்சியும் அளித்து, ஆர்வத்துடன் வேலை செய்ய வாய்ப்பு அளிப்பதோடு, நல்ல கௌரவமான ஊதியமும் தருகிறது.

நீங்கள் 19 முதல் 25 வயதுக்குள் இருப்பவராகவும், மண மாகாதவராகவும், நல்ல அழகான வசீகர தோற்றமுடைய வராகவும், கண் பார்வை நன்றாக உள்ளவராகவும் இருத்தல் வேண்டும். கல்வியில் குறைந்த பட்சம் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றவராகவும் இந்தியன் பாஸ் போர்ட் பெற தகுதி யுடையவராகவும் இருக்க வேண்டும்.

எங்களுக்காக நீங்கள் பணிபுரிய விரும்பினால், தயவுசெய்து உடனடியாக, இரண்டு பாஸ்போர்ட் சைஸ் (ஒன்று நேர் வாட்டத்திலும், மற்றொன்று பக்கவாட்டிலும் உள்ள) போட்டோக்களுடன், கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதவும்:

பிரதம ஏர் ஹோஸ்டஸ், ஏர்-இந்தியா
சாண்டாகுரூஸ், பம்பாய்

பம்பாயில் உள்ளவராக இருந்தால், நீங்கள் நேரிடையாக வேலை நாளான வியாழக்கிழமை அன்று சந்திக்கலாம். புது டில்லியில் உள்ளவராக இருந்தால், மாதத்தில் முதல் அல்லது மூன்றாவது திங்கட்கிழமைகளில் பிற்பகல் 2-30 மணிக்கு, கர்சான் ரோடு, ஹிமாலயா ஹவுஸில் உள்ள ஏர்-இந்தியா ஆபீசுக்கு விஜயம் செய்யலாம். தயவுசெய்து மறக்காது உங்களுடன் இரண்டு போட்டோக்களை எடுத்துச் செல்ல வேண்டும்.

குறிப்பு: எல்லாவிதத்திலும் தகுதியுடையவராக இருப்பின், பின் தங்கிய வகுப்பைச் சார்ந்த மற்றும் பழங்குடி மக்களின் விண்ணப்பங்களுக்கு விசேஷ சலுகை அளிக்கப்படும்.

AI. 5915

# ஜாங்கோ ஜக்கு

கதை:
குட்டி கிருஷ்ணன்

சித்திரம்:
ராஜு

23

ம.க.பி.ம.வையும் கட்டி இழுத்துக் கொண்டு அனந்தாச்சாரி ஒரு டாக்ஸி பிடித்து அப்பண்ணா வீட்டுக்கு வந்து சேர்ந்தார், - வைரங்களை மீட்ட ஜக்கு அங்கு தான் சென்றிருப்பான் என அவர் எண்ணியதால்.















டாக்ஸி விரைந்தது....




கப்பண்ணா வீட்டை மூவரும் அடைந்ததும்....













முற்றவில்லை; தொடரும்



அன்றுதான் நாங்கள் அந்த வீட்டுக்குக் குடிவந்திருந்தோம். ஐந்தாறு குடித்தனங்கள் கொண்ட 'ஸ்டோர்' அது. எங்கள் வீட்டுக்கு மட்டும் தனியான வசதி ஒன்று உண்டு. அங்கிருந்த ஐந்து கூண்டுகளில் அது முதலாவது. ஆதலால் வாயில் பக்கம் பார்க்கக்கூடிய ஜன்னல் உண்டு. மற்ற நான்கு 'போர்ஷன்' களிலும் காற்று என்பது அவரவர்கள் விடும் மூச்சுக் காற்றுத்தான். எங்கள் வீட்டில் மட்டும் தெற்கு நோக்கியிருந்த அந்த ஜன்னல் வழியாக வாயுதேவன் எப்போதாவது எட்டிப் பார்ப்பது உண்டு.

காலையிலிருந்து எனக்கு ஓய்வு இல்லை. கொண்டு வந்திருந்த சாமான்களையெல்லாம் வைக்க வேண்டிய இடத்தில் வைத்து, அன்றையச் சமையலையும் முடித்து, சேகரைக் கல்லூரிக்கு அனுப்பி வைத்தாகிவிட்டது. அவனுக்குக் கல்லூரியில் லெக்சரர் வேலை. ஹோட்டல் சாப்பாடு ஒத்துக் கொள்ளவில்லை என்று என்னை மட்டும் தன் உதவிக்கு அழைத்து வந்திருந்தான்.

ஊரிலே என் மூத்த பிள்ளை, ஒரே பெண், மற்றும் அவர் தனியாகத்தான் இருந்தார்கள். பெரியவன் அங்கே முனிசிபல் ஆபீசில் பொறுப்பான பதவி வகித்து வந்தான். பெண் ஒரு பள்ளிக்கூடத்தில் ஆசிரியையாக இருந்தாள். வேலையையும் பார்த்துக் கொண்டு அண்ணனுக்கும் அப்பாவுக்கும் ஆக்கிப் போட்டுக் கொண்டிருந்தாள்.

சமையல் அறையில் எல்லாவற்றையும் மூடி வைத்துவிட்டு முன் அறைக்கு வந்த என் பார்வை சட்டென்று எதிர் வீட்டின் மீது நிலைத்தது. வாசலில் ஒரு ஸ்கூட்டர் நின்று கொண்டிருந்தது. அந்த வீடு சற்று வீதிக்கு உள்ளடங்கியது. பழைய காலத்துப் பாணியில் கட்டப்பட்டது என்றாலும் பளபளவென்று இருந்தது. தெருவில் கால் வைத்து இறங்கக்கூடிய நிலையில் நின்றான் அவன். கையிலே ஒரு தோல் பை. உள்ளே நிலை வாயிற்படியை ஒட்டி நின்று அதில் சாய்ந்தாற்போல் இருந்தவள் அவன் மனைவியாகத்தான் இருக்க வேண்டும். தெருவின் இரு மருங்கும் எட்டிப் பார்த்தான் அவன். அவன் பார்வையில் ஒரு பதற்றம் தெரிந்தது. எதிர் வீட்டு ஜன்னலில் சற்று உள்ளே தள்ளி நின்ற என்னை அவன் கவனித்ததாகத் தெரியவில்லை. சரேலென்று உள்ளே பாய்ந்த அவன் தன்

# மன்னிப்பு உண்டா?

அன்னம்

கைகளில் அவளை அள்ளி எடுத்து அவள் இதழ்களில் —

அவள் முகம் குங்குமமாகச் சிவந்தது. அவன் ஸ்கூட்டரை உதைத்துத் தள்ளி அதன் மேல் ஏறிக் கொண்டான். அவள் தலை அசைத்ததும் ஸ்கூட்டர் புறப்பட்டது.

என்னால் அவளை இப்போது நன்றாகப் பார்க்க முடிந்தது. இவளை நான் இதற்கு முன் 'ல் எங்கேயோ பார்த்திருக்கிறேன். எங்கே? எங்கே ?.... முதலில் சட்டென்று கவனம் வரவில்லை.

வாயிற்படியில் தலையை வைத்துப் படுத்த சில நிமிஷங்களில் எனக்குக் கவனம் வந்தது. இவள் அவளேதான். அவன் இவனேதான்.

என் பெரிய பிள்ளை ஊரில் இருக்கிறான் என்று சொன்னேனல்லவா ? அவன் தன் அப்பாவை அப்படியே உரித்து வைத்துக் கொண்டு பிறந்திருந்தான். சற்றுப் பருமனான தேகம். அவர் நல்ல கறுப்பு. முகத்துக்குப் பொருத்தம் இல்லாத மூக்கு. காதுகள் இரண்டும் முகத்துடன் ஒட்டாமல் சற்று அதிகமாக வெளியே நீட்டிக் கொண்டிருக்கும். காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு என்றாலும்கூட, என் பிள்ளை லட்சணமானவன் என்று நான் சொல்லமாட்டேன். இருந்தாலும் அவன் நல்லவன். அதிர்ந்து பேசமாட்டான். யாரையும் அலட்சியமாக நினைக்க மாட்டான். தன் குறை அவனுக்குத் தெரியும்.

அப்படிப்பட்ட அவன் மனத்தில் சலனம் ஏற்பட்டது — மூன்று ஆண்டுகளுக்கு முன்பு. இந்தப் பெண்ணை — தேவகி என்ற ஞாபகம்— அவன் கோயிலில் பார்த்திருக்கிறான். அவன் மனத்துக்குப் பிடித்திருந்தது. எதிர்ச் சரகில் இருந்த வீடு ஒன்றுக்கு அவள் விருந்தாளியாக வந்திருந்தாள். அவன் அப்பாவிடம் பேச அவனுக்கு இன்னமும் பயம்தான். என்னிடம் மட்டும் தன் எண்ணத்தைத் தயங்கித் தயங்கித் தெரிவித்தான்.

நான் அந்தப் பெண்ணின் வீட்டுக்குப் போய் அவளைப் பற்றிய முழு விவரங்களையும் தெரிந்து வரப் புறப்பட்டேன். கோயில் யானை அந்தப் பெண் கொடுத்த வாழைப் பழங்களைத் தன் துதிக்கை நீட்டி வாங்கித் தின்று கொண்டிருந்தது.

நான் அவர்கள் வீட்டுப் படி ஏறியபொழுது, ''ம....வனஜா... இந்த ஊரிலே இரண்டு யானைகள்



இருக்கே..... உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் அவள்.

''ஏதுடி இரண்டு.....? ஒன்றுதான்....'' என்று மறுத்தாள் வனஜா.

'' உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். இன்னொரு யானை அந்த வாதா மரத்து வீட்டிலிருந்து கொஞ்சம் முன்பு சைக்கிளில் புறப்பட்டுப் போச்சே !'' என்று சொல்லிச் சிரித்தாள் தேவகி.

வனஜாவும்கூடச் சேர்ந்து நகைத்தாள். '' அப்படியும் உன் கணக்கு தப்புதான். மொத்தம் மூன்று யானை. மூன்றாவது யானையும் வாதா மரத்து வீடுதான். ஆனால் சைக்கிளில் போகாது. ஆடி ஆடி நடந்துதான் போகும் !'' என்றாள் வனஜா.

வாதா மரத்து வீடு என்பது எங்கள் வீடுதான். சைக்கிளில் போன யானை என் பிள்ளை. அவனுக்கு-வரன் தேடித்தான் நான் வந்திருக்கிறேன். நடந்து போகும் யானை அவன் அப்பா. இதற்குப் பிறகு அந்த வீட்டில் போய் அவளைப் பெண் கேட்க எனக்கு என்ன பைத்தியமா ?

இப்போது இவளுக்குக் கல்யாணமாகி விட்டதா ? நல்ல பொருத்தமான ஜோடிதான். என்ன இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு இத்தனை வாய்த்துடுக்கு வேண்டாம் !

**ப**கல் மூன்று மணி இருக்கும்.

மெட்டி குலுங்கும் சத்தம் கேட்டுத் தலையை நிமிர்த்திப் பார்த்தேன். அந்தப் பெண் தேவகிதான் எங்கள் 'போர்ஷனை'க் கடந்து போய்க் கொண்டிருந்தாள்.

ஒரு பெருமூச்சுடன் திரும்பிப் படுத்தேன்.

இரண்டே நிமிஷங்களில் என் கவனம் கலைந்தது. ''மாமி!'' என்று அழைத்தவள் அவள்தான். ''உங்கள் வீட்டில் 'ரயில்வே கைடு' இருக்குமா ? ஒரு நிமிஷம் பார்த்து விட்டுத் தருகிறேன்'' என்றாள்.

அவள் கண் எதிரே ரேடியோ அருகே 'ரயில்வே கைடு' கிடந்தது. அதைப் பார்த்து விட்டுத்தான் கேட்டிருக்கிறாள். மௌனமாக எழுந்து எடுத்துக் கொடுத்தேன்.

இதில் ஆரம்பித்த எங்கள் அறிமுகம் தொடர்ந்தது. என்னைப் பார்க்க அவள் அடிக்கடி வர ஆரம்பித்தாள். நானும் அவள் வீட்டுக்குப் போகத் தொடங்கினேன். ஆயினும் என் மனத்தில் ஒரு விரிசல். அவள் நன்றாக அமோகமாக வாழ வேண்டும் என்று என்னால் நெஞ்சார நினைக்க முடியவில்லை.

**அ**ன்று கோயிலில் சனிசுவரனுக்கு எண்ணெய் போட்டு விட்டுத் திரும்பினேன். சினிமா கொட்டகை வாசல் வழியாகத்தான் நான் வரவேண்டும். என்னை உராய்கிறாற் போல் ஒரு ஸ்கூட்டர் பாய்ந்தது. ''கடன்காரா !'' என்று திட்டியபடி நிமிர்ந்து பார்த்தேன். ஸ்கூட்டரில் போனவன் தேவகியின் கணவன் ராஜப்பாதான். ஆனால் அவன் தோளைத் தொட்டுக் கொண்டு பின்னால் அமர்ந்து சென்ற பாவை தேவகி இல்லை. உள்ளத்தில் குரூரம் கொதிக்கத் தேவகியின் வீட்டுக்குப் போனேன். ''அவன் யாரோ ஒருத்தியுடன் சினிமாவுக்குப் போவதை இந்தக் கண்களால் பார்த்தேன் !'' என்றேன்.

'' நீங்கள் தப்பாகச் சொல்கிறீர்கள், அவராக இருக்காது !'' என்றாள் அவள்.

'' நான் எதற்கு அம்மா பொல்லாப்பு சொல்கிறேன்..... கோவிலுக்குப் போனவள் எண்ணெய்க் கிண்ணத்தைக்கூட வீட்டில் கொண்டு வைக்காமல் பதைபதைக்கிற மனசுடன் ஓடி வந்திருக்கிறேன். நீ ஜாக்கிரதையாக இருக்கணும்டி, தங்கம் !''

அவள் விழிக்கடையில் நீர் துளித்தது.. என் முயற்சி வெற்றிதான்.

மறு நாள் காலையில் அவன் ஆபீஸுக்குப் புறப்படுவதற்காக ஜன்னல் மறைவில் காத்திருந்தேன். அதோ அவன் வருகிறான். வழக்கம் போல் அவளும் பின்தொடர்கிறாள். அவன் தயங்குகிறான். தெருவில் இரண்டு பக்கமும் பார்க்கிறான். சட்டென்று அவளைத் தாவி அணைத்து......

'சே ! நான் வைத்த வெடி இப்படி புஸ்வாணமாகவா போக வேண்டும்?' எனக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. எதிர் வீடு நோக்கிப் புறப்பட்டேன்.

''மாமி, என்னுடையவர் அந்த ஸ்ரீராமச் சந்திர மூர்த்தி மாதிரி. நீங்கள் பார்த்த பெண் அவர் மானேஜிங் டைரக்டருடைய பெண். அவளைக் கொண்டு போய்த் தியேட்டரில் விட்டு விட்டுத் திரும்பவும் ஆபீஸுக்குப் போய்விட்டாராம். வரப் பத்து மணிக்கு மேல் ஆகிவிட்டது......''

''இதெல்லாம் அவனாகச் சொன்னானா?....நீ கேட்ட பிறகு சொன்னானா ?''

'' ஏன் ?... நான் கேட்ட பிறகுதான் சொன்னார்.''

'' இப்படி ஏமாந்து போயிருக்கிறாயே.... என்னமாய்க் கதை கட்டி உன்னை மசிய வைத்து விட்டான் ?'' என்று அனுதாபப்பட்டேன்.

''இல்லை, மாமி!... அவர் என்னிடம் பொய் சொல்லமாட்டார்......'' என்றாள் தேவகி திடமாக.

**ப**த்து நாட்கள் சென்றிருக்கும்.

என் பிள்ளை சேகர் இரவு பன்னிரண்டு மணிக்கு மேல்தான் வந்தான்.

''எதிர் வீட்டு ராஜப்பா குடித்துவிட்டு ஒரு சட்டைக்காரியுடன் அமர்க்களம் செய்து கொண்டிருந்தான், அம்மா!'' என்றான்.

வெறும் வாயை மெல்லும் எனக்கு அவல் கிடைத்துவிட்டது. எல்லாவற்றையும் ஒன்றுக்குப் பத்தாகக் கூட்டி அவளிடம் போய்ச் சொன்னேன்.

முகத்தில் கலவரம் பரவ அவள் திக்பிரமித்து உட்கார்ந்தாள். மறுநாள் காலை மணி பத்தரை எப்போது ஆகும் என்று நான் காத்திருந்தேன். ராஜப்பா மட்டும் வெளியே வந்து ஸ்கூட்டரில் பறந்தான். தேவகி வழி அனுப்ப வாசல் வரை வரவில்லை.

மனத்தில் ஒரு திருப்தி. 'துக்கம்' விசாரிக்கப் புறப்பட்டேன். அவள் முகம் அழுது அழுது சிவந்திருந்தது. அவள் கன்னத்தில் அடிபட்ட விரல் தழும்புகள் தெரிந்தன. தன் கணவனை நேரிலேயே கேட்டிருக்கிறாள். அவன் 'பாண்ட்' பையிலிருந்த ஹோட்டல் ரசீது அவள் கையில் சிக்கியிருந்தது.



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும், எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது
## அந்த 'உணர முடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு



உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது என்பதை எந்த டாக்டரும் கூறுவார். இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச் சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட ஃபாஸ் ஃபேட்டுக்கள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் தேவை, இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml., 470 ml.

ஒரு தரமான வார்னர் லாம்பர்ட் தயாரிப்பு




WVT-G-7 TM

'' உனக்கு இதெல்லாம் யார் சொன்னது?'' என்று கேட்டிருக்கிறான் ராஜப்பா.

''யார் சொன்னால் என்ன? உண்மையா, இல்லையா, எனக்குத் தெரிய வேண்டும் !'' என்று கேட்டிருக்கிறாள் அவள்.

'' நான் பொய் என்கிறேன்..... நீ நம்புவாயா?''

''நம்பும்படி இருந்தால் நம்புகிறேன்.... இந்த ஹோட்டல் ரசீதுக்கு என்ன பதில் வைத்திருக்கிறீர்கள்?'' என்று அந்த ரசீதைக் காண்பித்திருக்கிறாள்.

'' இதுதான் பதில்!'' என்று அவள் கன்னத்தில் ஓங்கி அறைந்திருக்கிறான்.

'' உளவா பார்க்கிறாய், கழுதை! நான் உயிரைக் கொடுத்துவிட்டு வேலை செய்து சோர்ந்து போய்த் திரும்புகிறேன். என்னை நீ குறுக்கு விசாரணை செய்கிறாயா? உன் ஊரைப் பார்க்க ஓடு !'' என்று இரைந்திருக்கிறான்.

நான் அவளுக்குப் 'புத்தி' சொன்னேன். ''இப்படி வளர விடக் கூடாது. உன் அப்பாவிடம் போ ! நாலு பேரை விட்டு நியாயம் கேட்கச் சொல்..... நீ பக்கத்தில் இல்லாத போதுதான் உன் அருமை அவனுக்குப் புரியும்'' என்று உபதேசித்தேன்.

அன்றிரவு அவர்கள் வீட்டு வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. தேவகி பெட்டியும் படுக்கையுமாக ஏறிப் போனதை நான் பார்த்தேன். எதிரிலிருந்த கூடு சிதைந்துவிட்டது. என்னால் சிதைக்கப்பட்டுவிட்டது.

**ப**தினைந்து நாட்கள் பறந்தன. என் வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றது.

இறங்கியவன் என் பிள்ளை சேகர் — கூட யாரோ ஒருத்தி, மாலையும் கழுத்துமாக. எனக்குத் தலை சுற்றியது. பின்னால் வந்த கார் ஒன்றிலிருந்து தோழர்கள் பட்டாளம் ஒன்று இறங்கியது. என் வீட்டுக்குப் பக்கத்தில் குடியிருந்தவர்கள் அத்தனை பேரும் கூடிவிட்டார்கள்.

'' இவள்தான் அம்மணி. இது என் அம்மா!'' என் பிள்ளை என்னை அவன் கட்டிக் கொண்டு வந்த பெண்ணிடம் அறிமுகம் செய்து வைத்தான்.

''இதெல்லாம் என்னடா கூத்து?''

''ஷட் அப்! அநாவசியமாகக் கத்தாதே..... இது என் வீடு....உன்னால் கமுகமாக இங்கு இருக்க முடியுமானால் இரு..... இல்லாவிட்டால் மூட்டையைக் கட்டிக் கொண்டு ஊரைப் பார்க்கப் போய்ச் சேர்! யானையைப்போல் ஓர் அண்ணன், மரப்பாச்சி மாதிரி ஒரு தங்கை...இவர்களுக்காக நான் எத்தனை நாட்கள் சந்நியாசியாக இருக்க முடியும்?'' என்று கேட்டான் அவன்.

என் நா எழும்பவில்லை. ஒரு பாவமும் அறியாத ஒரு பெண் விளையாட்டுத்தனமாகத் தனிமையில் என் பிள்ளையை யானை என்று வர்ணித்ததற்காக எப்படிப் பழி வாங்கினேன்? இன்று அவன் கூடப்பிறந்த தம்பியே நான்கு பேர் எதிரில் என்னை வன்மத்துடன் வைகிறானே? என்னால் என்ன செய்ய முடியும்?

என் உடைமைகளைச் சுருட்டிக் கொண்டு எல்லோரும் என்னைக் கேலியாகப் பார்க்க நான் புறப்பட்டேன். வாயிற்படி இறங்கிய என்னை ஆதரவுடன் தாங்கிய கரம் தேவகியுடையதுதான். அவள் எப்போது திரும்பினாள் ?

''நீங்கள் தனியாகப் போக வேண்டாம், மாமி, அவரை விட்டு ஊருக்குத் தந்தி கொடுக்கச் சொல்கிறேன். யாராவது வந்து அழைத்துப் போகட்டும்!'' என்றாள் அவள்.

''வாருங்கள், அம்மா !'' என்று வரவேற்றான் ராஜப்பா. ''உங்கள் பிள்ளையையும் இந்தப் பெண்ணையும் நான் பல இடங்களில் சேர்த்துப் பார்த்ததுண்டு. ஆனால் யார் மேலும் அநாவசியமாக அவதூறு கற்பிக்க நான் பயந்தேன்'' என்றான் ராஜப்பா.

என் உடலும் உள்ளமும் கூனிப் போயின.

'' நீங்கள் எங்கேயோ புறப்பட்டுக்கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறதே !'' என்று தயங்கினேன்.

''வடபழனிக்குப் போய்க் கொண்டிருக்கிறோம். நீங்களும் வாருங்களேன் !'' என்று அவள் அழைத்தாள் கள்ளம் இல்லாமல்.

நான் போகவில்லை. நான் செய்த பாவத்துக்கு எந்தத் தெய்வ சந்நிதியிலும் எனக்கு மன்னிப்பே கிடைக்காதே!

## இறை பணிக்கு உதவுங்கள் !

கொம்மடிக்கோட்டை சிறிய கிராமம். 'வளர் திருச் செந்தூர்' என்ற சிறப்புப் பெயரைக் கொண்ட கொம்மடிக்கோட்டை திருநெல்வேலியிலிருந்து தென்கிழக்கே சுமார் நாற்பது கல் தொலைவில் இருக்கிறது. இவ்வூர் சிவாலயமான வாலை குருசாமி கோயில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தையது. இவ்வாலயம் இன்று சிதிலமடைந்துவிடும் நிலையில் உள்ளது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் இவ்வாலயச் சிதில நிலையைக் கண்டு இவ்வாலயப் புனருத்தாரணத்துக்காக ஒரு கமிட்டியையும் தொடங்கி வைத்துள்ளார். பழமையான இக் கோயிலைப் பழுதுபார்க்கும் திருப்பணிக்கும் பக்தர்கள் தங்களால் இயன்ற நிதியை உதவி, பக்திப் பணியில் ஈடுபடக் கோருகிறோம். இந்தக் கைங்கரியத்துக்குத் திரவியம் அனுப்ப வேண்டிய முகவரி: திரு கே. பகவதி பாண்டியன், தர்மகர்த்தா, ஸ்ரீ வாலை குருசுவாமி கோயில், கொம்மடிக்கோட்டை, 628653, நெல்லை ஜில்லா.




"உமக்கு நாஃப்தா தெரியுமா?" என்று ஒரு கேள்வியைப் போட்டார் விவசாயப் பத்திரிகை நிருபர்.

பாண்டியன் எக்ஸ்பிரஸ் ஓடிக் கொண்டிருந்தது.

"நான் மெட்ராஸ்காரன். 'நாஸ்தா'ன்னுத் தெரியும்!" என்றேன்.

"நாஃப்தா (Naptha) எண்ணெய் சுத்திகரிப்பில் கிடைக்கும் கச்சாப் பொருள். ரஸாயன உரங்களுக்குத் தேவையான அமோனியா தயாரிக்க உதவுகிறது. குருட் ஆயில் தெரியுமில்லேயோ உமக்கு?"

"ஓ! இந்தக் காலத்தில் பல ஹோட்டல்களிலே அந்த ஆயில்லே பண்ணின மாதிரிதான் உப்புமா இருக்கிறது. எப்படிச் சாப்பிடுவது என்று தெரியாமல் விழிக்க நேர்கிறது!"

"உம்மிடம் என்னத்தைப் பேச? பேசாமல் தூங்கும்!"

"அதுதான் நடக்காது. நான் குறட்டை விட்டுத்தான் தூங்குவேன்!"

"அட பாவி மனுஷா! முன்னாடி சொல்லக் கூடாதோ? வேறு கம்பார்ட்மெண்டுக்குப் போயிருப்பேனே! ராத்திரி சிவராத்திரிதான்!"

அவர் துயரைப் பொருட்படுத்தாமல் பாண்டியன் எக்ஸ்பிரஸ் விரைந்தது. மறுநாள் மதுரையை அடைந்து அங்கிருந்து பஸ்ஸில் தூத்துக்குடிக்குப் பயணமானோம் பத்திரிகை நிருபர்களான நாங்கள்.

நண்பர், நாஃப்தா பற்றியும் குருட் ஆயில் பற்றியும் 'சிதம்பர ரகசியங்'களைக் கேட்டு என்னைத் திணற அடித்ததற்குக் காரணம் உண்டு.

தூத்துக்குடி ரசாயன உரத் தொழிற்சாலை அமையவிருக்கும் ஸ்பிக் நகருக்கு நாங்கள் சென்று கொண்டிருந்தோம். ஸதர்ன் பெட்ரோ கெமிக்கல் இன்டஸ்ட்ரீஸ் கார்ப்பொரேஷனின் இந்த ரசாயன உரத் தொழிற்சாலையை நிறுவுவதற்கான ஆரம்பகட்டப் பணிகள் பிப்ரவரி 14ந் தேதி தொடங்கின. இந்த விழாவில் கலந்து கொள்ளவே பத்திரிகைப் பிரதிநிதிகளின் இப்பயணம்.

எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையில் கிடைக்கும் கச்சாப் பொருள் நாஃப்தா, அமோனியா உற்பத்திக்குப் பயன்படுகிறது. சிந்திரி ரஸாயன உரத் தொழிற்சாலையில் நாஃப்தாவிலிருந்து நேரிடையாக அமோனியா தயாரிக்கும் முறையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதனால் 1.5 கோடி அன்னியச் செலாவணி மிச்சமாகும்.

ஸ்பிக் நகரில் உரத் தொழிற்சாலை வெகு வேகமாக எழும்பிக் கொண்டிருப்பதற்குரிய 'சிதம்பர ரகசியத்'தினைத் திரு எம். ஏ. சிதம்பரம் அம்பலப்படுத்தினார்.

"ஐயா! இங்கே திறமைக்குத்தான் முதலிடம். பொரிக கொண்டு வரும் அரசியல் பிரமுகர்களிடம், ஐயா! பொரிகக் கடிதங்கள் கொடுத்து எங்களைத் தொல்லைப்படுத்தாதேயுங்கள். உங்களுக்குத் தேவை தேர்தல் நிதிக்குரிய தொகைதானே. அதை வாங்கிக் கொண்டு போய்விடுங்கள்' என்று நைச்சியமாகப் பேசி அனுப்பி விடுவோம். திறமைசாலிகளைத் தேர்ந்தெடுப்பதில் ஒரு காரியத்தின் வெற்றி 80 சதவிகிதம் கிடைத்து விடுகிறது!" என்றார்.

தூத்துக்குடிக்கு அருகில் ஸ்பிக் நகரில் 710 ஏக்கரில் உருவாகிக் கொண்டிருக்கும் பிரும்மாண்டமான உரத் தொழிற்சாலைக்கு 74 கோடி ரூபாய் செலவாகும். அரசுத் துறையும், தனியார் துறையும் இணைந்து கூட்டுத் துறையாக இயங்குகிறது இந்தத் தொழிலகத்தை உருவாக்க. இன்னும் பதினைந்து மாதங்களில் இயங்கத் தொடங்கி விடும் இத் தொழிலகம். இந்தத் தூத்துக்குடி உரத் தொழிற்சாலையில் அமோனியா தொழிலகம் ஒரு நாளைக்கு 1100 டன் அமோனியாவும், யூரியா தொழிலகம் ஒரு நாளைக்கு 1600 டன் யூரியாவும் தயாரித்து உலகிலேயே அதிக அளவு உற்பத்தி ஸ்தானத்தைப் பெறப் போகிறது. இந்தத் தொழிற் திட்டத்தில் ஓர் அதிசயம் அயல் நாட்டுத் தொழில் நுணுக்க, நிர்வாகப் பொறுப்புக்கள் நேரிடையாக இல்லாதது. பிரிட்டன், ஜப்பான் போன்ற நாடுகளிலிருந்து உபகரணங்களைத் தருவித்து யோசனைகளையும் ஏற்றுள்ள போதிலும் தொழில் நுணுக்கத்திலோ, அல்லது நிர்வாகத்திலோ அந்நாட்டவர் நேரடியாகப் பங்கு பற்றினர் என்பது கிடையாது. குஜராத் உரத் தொழிற்சாலையை நிர்வகித்து அனுபவம் வாய்ந்த திரு கே. ஆர். ஸ்ரீவத்ஸாவும் அவரது திறமை மிக்க சகாக்களும் இந்தத் தொழில் நிறுவனப் பணியில் முழு மூச்சுடன் ஈடுபட்டுள்ளார்கள்.

ஜப்பானுக்குச் செல்லும் தொழிலதிபர்கள் ஒஸாகா நகருக்குச் சென்றால் அங்குள்ள ஜப்பானியர்கள் "மோகாரி மக்கா? — நீங்கள் பணம் பண்ணி வருகிறீர்களா?" என்று கேட்டே வரவேற்பார்களாம். தனி மனிதர்களின் துரித முன்னேற்றம்தான் நாட்டின் முன்னேற்றம் என்பதை அவர்கள் நன்கு உணர்ந்துள்ளதை இது எடுத்துக் காட்டுகிறது.

ஜப்பானியர் உலகில் நாற்பது பிரும்மாண்டமான பெட்ரோ கெமிக்கல் தொழிலகங்களை நிறுவிப் பெருமை யுற்றிருக்கிறார்கள். இந்தியாவில் மட்டும் அவர்கள் நிறுவிய ஆலைகள் ஆறு. இப்பொழுது தூத்துக்குடி ஸ்பிக் நகரில் அங்குரார்ப்பணம் ஆகும் பெட்ரோ கெமிக்கல் கார்ப்பரேஷனின் உரத் தொழிற்சாலை உலகில் முதன்மை ஸ்தானம் வகிக்கும். யூரியா, அமோனியா உரத் தொழிலக நிர்மாணப் பணிகளில் ஜப்பானிலுள்ள டோயோ இன்ஜினியரிங் கார்ப்பரேஷன், இங்கிலாந்திலுள்ள பவர் காஸ் ஸ்தாபனம் ஆகியவை உதவ முன்வந்துள்ளன.

பதினைந்காம் தேதி ஸ்பிக் நகர் விழாக்கோலம் பூண்டு விருந்தினர்களை 'வருக வருக' என்று வரவேற்றது. அங்குரார்ப்பண விழாக்கள் ஒவ்வொன்றாக நிகழ்ந்தன. திறப்பு விழாக்கள் என்றால் மந்திரிகள் என்ற முறை மாறி, இந்நிறுவனத்தின் டைரக்டர்களும் அதன் நிர்மாணப் பணியில் உதவும் ஜப்பானிய, இங்கிலாந்து தொழில் துறை விற்பன்னர்களும் திறப்பு விழாக்கள் நடத்தியது பொருத்தமாக இருந்தது.

"இந்தப் பெட்ரோல் கெமிக்கல் கார்ப்பரேஷன் தொழிற்சாலையை நிறுவுவதற்கு முன்னால் சகல வசதிகளும் கொண்ட வீடுகளை அதன் சிப்பந்திகளுக்கு வழங்கி விட்டால் அவர்கள் வீட்டுக் கவலையின்றி முழு மூச்சுடன் தொழிலக நிறுவனப் பணியில் ஈடுபடலாம் அல்லவா?" என்று கூறி, அழகிய வீடுகள் நிறைந்த ஸ்பிக் நகர் காலனியைத் திறந்து வைத்தார் திரு எம். ஏ. சிதம்பரம்.

அன்றைய ஸ்பிக் நகர் திறப்பு விழாவில் சிறு குழந்தைகள் பல்வேறு ராஜ்ய உடைகளில் வந்து விருந்தினர்களுக்கு மாலையிட்டு மரியாதை செலுத்தியபோது தேசிய ஒருமைப்பாட்டைப் பற்றிப் பெரியவர்களை விடக் குழந்தைகள் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்று எண்ணத் தோன்றியது.

முதல் பக்கம் : ஸ்பிக் நகரில் யூரியா தொழிலகம் உருவாகிறது.
இந்தப் பக்கம் : 1. திரு எம். ஏ. சிதம்பரம், 2. திரு கே. ஆர். ஸ்ரீவத்ஸா, 3. திரு ஏ. ஸி. முத்தையா, 4. அமோனியா தொழிலகம் உருவாகிறது.











# படித்துப் பாருங்கள்

## ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் (ஆங்கிலம்)

செயற்கரிய செய்த பெரியவர்களுள் நீங்காத இடம் கொண்டவர் ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதேந்திரர்கள். பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த இந்த மகாபுருஷர் அறிவுக் கடலாகவே விளங்கியவர். தத்துவ ரீதியிலும், தோத்திர ரூபத்திலுமாக நூற்றுக்கு மேற்பட்ட உத்தம நூல்களை அளித்தவர். அத்வைதி எனும் முறையில் சகல தேவதைகளையும் ஒரே பரம்பொருளின் வடிவாக உணர்ந்தவரெனினும், அவரது காலத்தில் சைவம் மிகுந்த தாக்குதலுக்கு ஆளாகியிருந்ததால் சைவ சித்தாந்தத்தை விசேஷமாக விளக்கி நிலைநாட்டி வைத்தார் ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர். அவருக்கு எந்தச் சித்தாந்தத்திடமும் வெறுப்பில்லை. இறைவனை வேறாக நினைத்து துவைதத்தில் வழிபடத் தொடங்கி, இறைவனே நம் உள்ளுறை சாரம் — அவனுக்கு நாம் சரீரம் என்கிற விசிஷ்டாத்வைதத்தின் மூலமாகச் சென்று, இறுதியில் இறைவன் ஜீவன் எல்லாமே ஒரு பிரம்மத்தின் தோற்றங்கள்தான் என்கிற அத்வைத அநுபவத்தைப் பெறலாம் எனக் கருதிய விசால மனத்தவர் அவர். எனவேதான் விசிஷ்டாத்வைதம், துவைதம் இவற்றின் சித்தாந்தங்களை விளக்குகிற நூல்களையும் அவர் இயற்றியிருக்கிறார். இப்பேர்ப்பட்ட ஒரு சமரஸ உள்ளத்தைச் சமய உலகில் எந்தப் பெரியாரிடமும் இத்துணைச் சிறப்பாகக் கண்டதில்லை. அவர் பரம பக்தர். அநுபவ ஞானி. அவருக்கு வேலூர் மன்னன் சின்ன பொம்ம நாயகன் கனகாபிஷேகம் செய்ய, அந்தத் தியாகச் செம்மல் இப்பொன்னைக் கொண்டு தாம் பிறந்த ஊராகிய அடையபலத்தில் கோயிலைப் புதுப்பித்து, வித்யாசாலையும் தோற்றுவித்தார்.

நமது சமய — தத்துவ சரித்திரத்தில் ஒரு சுடர்த் தாரகையாகத் திகழும் ஸ்ரீமத் அப்பைய தீக்ஷிதரவர்களின் வாழ்க்கை வரலாற்றினையும், அவரது பணிகளின் பெருமையையும், அவரது நூல்களின் சாரத்தையும் ஒருங்கே அடக்கி இந்நூலை அளித்திருக்கிறார் டாக்டர் என். ராமேசன் அவர்கள். நூலாசிரியர் ராமேசனும் ஓர் அபூர்வப் பிறவி தான்! அவர் ஆந்திரப் பிரதேசத்தில் மிகவும் பொறுப்பான உத்தியோகத்தில் உள்ள ஐ. ஏ. எஸ். அதிகாரி. அதே அளவு பொறுப்புடன் புதைபொருள் ஆராய்ச்சிகளில் திளைத்து, டாக்டர் பட்டமே சமீபத்தில் பெற்றிருக்கிறார். ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களை குருவாகவும் தெய்வமாகவும் கொண்ட இந்தப் புண்ணியசாலி ஆதிசங்கரரின் வாழ்க்கை வரலாற்றை முன்பு அரிய ஆங்கில நூலாகத் தந்தார். தற்போது ஸ்ரீ அப்பைய தீக்ஷிதரைக் குறித்து நுணுகி ஆராய்ந்து இந்த அரிய நூலை வழங்குகிறார். எவ்வித யோக்கியதையும் இல்லாத நம்மிடம் இப்புத்தகமெழுதும் பொறுப்பை ஸ்ரீ அப்பைய தீக்ஷிதேந்திர கிரந்தாவளி பிரகாசன சமிதியார் அளித்ததாக அவர் கூறுகிறார். ஆனால் நூலைப் படித்து முடித்த பின், இவரைப் போல் யோக்கியதாம்சம் பெற்ற வேறெவரும் இருக்க இயலாது எனக் காண்கிறோம். இதில் ஆராய்ச்சி இருப்பது மட்டுமில்லை; மனோன்னதமானதொரு காவிய நாயகனின் நெஞ்சைத் தொடும் கதையும் சேர்ந்து இனிக்கிறது.

Distributors: B.G. Paul & Co., 4, Francis Joseph street. Madras-1 Rs. 6/-

''இந்தப் பிரும்மாண்ட உரத் தொழிற்சாலையினால் சிறு தொழில்கள் ஏற்பட வாய்ப்புண்டா?'' என்று வினவினேன்.

''பத்து லட்சத்திலிருந்து 50 லட்சம் வரை முதலீடு செய்யக் கூடிய தொழிலதிபர்கள் பல்வகை உபதொழில்களில் ஈடுபட வாய்ப்பிருக்கிறது. பத்து வருஷங்களில் தூத்துக்குடி தொழில் நகரமாக 200 கோடி மூலதனத்துடன் இயங்கும். அணு சக்திக் கமிஷன் கன நீர் ( Heavy water ) தயாரிப்புக்காக 23 கோடி செலவில் ஒரு தொழிலகத்தை நிறுவப் போகிறது. இதற்காக இது பயன்படுத்தும் அமோனியா, உபயோகம் முடிந்ததும் முழுமையாக உரத் தயாரிப்புக்குத் திரும்பி வந்துவிடும்! இது தவிர டிட்கோ, சுத்திகரிப்பு ஆலை ஒன்றை 40.5 கோடி செலவில் நிறுவப் போகிறது!'' என்று 'ஸ்பிக்' உதவித் தலைவர் திரு எம். ஜி. மேனன் எடுத்துரைத்தார்.

புதுதில்லி இந்திய விவசாய ஆராய்ச்சி நிலையத்துக்கு ஸர் சி. வி. ராமன் விஜயம் செய்தாராம். அவர் ஆராய்ச்சி நிலையத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வரும்போது நூலகக் கட்டிடத்தின் மேலுள்ள டவர் கடிகாரம் ஓடவில்லை! அது அவர் கண்ணில் பட்டுவிட்டது. உடனே பத்து ரூபாய் நோட்டை இந்திய விவசாய ஆராய்ச்சி நிலைய டைரக்டர் ஸ்ரீ சுவாமிநாதனிடம் எடுத்துக் கொடுத்து, ''இந்தக் கடிகாரத்தை முதலில் ரிப்பேர் செய்யச் சொல்லுங்கள்!'' என்றாராம்.

துரும்பளவு தவறும் ஆராய்ச்சி நிலையத்தை அண்டக் கூடாது என்பதில் ஸர் ஸி. வி. ராமனுக்கு அவ்வளவு அக்கறை.

ஸ்பிக் தொழில் நகர் இதே அளவு கவனமும் கருத்தும் அடையப்பெற்றுத் துரிதமாய் வளர்ந்து தமிழகத்துக்குப் பெருமை தேடித் தரட்டும்.

— பி.எஸ்.எம்.


NEW!
SUPER
Surf



# மெய்யான ஊழியர் மொய்னிஹன்

**எச்சரிக்கை: சிந்திப்பதற்கென்றே நேரம் ஒதுக்குகிறார் இம் மனிதர்!**

அமெரிக்க அதிபர் நிக்ஸன் இன்று 'ஒரு சமாதானத் தலைமுறை'க்காகத் தாம் பாடுபட்டு வருவதாகக் கூறுகிறார்.

'ஒரு சமாதானத் தலைமுறை' என்ற இந்த லட்சியம் அவர் மனத்தில் உதித்தது எப்படி?

புதிய அமெரிக்கத் தூதர் டேனியல் பி. மொய்னிஹன் புதுதில்லியில் வந்து இறங்கியதும் 'நேருஜி உபயோகித்த சொற்றொடர் அது' என்பதை வெளியிட்டார்.

அதிபர் நிக்ஸன் துணை ஜனாதிபதியாக இருக்கையில் முன்பு இந்தியாவுக்கு வந்திருந்தபோது, "இந்தியாவுக்கு மிகவும் தேவையான விஷயம் என்ன?" என்று நேருஜியைக் கேட்டாராம். நேருஜி சொன்ன பதில்: "இந்தியாவுக்கு மட்டுமல்ல உலகுக்கே தேவை, ஒரு சமாதானத் தலைமுறை." கெட்டியாகப் பிடித்துக் கொண்டார் நிக்ஸன்.

மேற்கூறிய நிகழ்ச்சியை நினைவுகூர்ந்த மொய்னிஹனுக்கு மூன்று ஜனாதிபதிகளிடம் பணியாற்றிய பெருமை உண்டு. அவர்கள் கென்னடி, ஜான்ஸன், நிக்ஸன்.

இன்னும் ஐந்து நாட்களில் நாற்பத்தாறு வயது நிரம்பப் பெறும் ஸ்ரீ மொய்னிஹன் உழைப்பால் உயர்ந்தவர். சின்ன வயதில், "டைம்ஸ்" சதுக்கத்தில் பூட் பாலிஷ் போட்டதுண்டு. பத்திரிகைகளை வீதிகளில் கூவிக் கூவி விற்றதுண்டு. ரயில்வேயில் கூலி ஆளாக வேலை பார்க்கும்போதுதான் ஸிட்டி காலேஜில் இலவசமாகக் கல்லூரித் தேர்வுகள் நடத்துகிறார்கள் எனக் கேள்விப்பட்டு ஓடினார். வெற்றி பெற்று ஓராண்டு படித்தார். பிறகு கடற்படைப் பணி மூன்றாண்டுகளுக்கு. அப்புறம், மீண்டும் படிப்பு, பட்டம், உபகாரச் சம்பளம், மேற்படிப்பு, மேலும் பட்டங்கள் என வெளுத்து வாங்கினார்.

ஆக, அரசியலோ, அரசாங்கமோ இவர் பணியை ஏற்காத நாட்களில் அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் டாக்டர் மொய்னிஹனின் அறிவாற்றலைப் பயன்படுத்திக் கொள்ளப் போட்டி போடுவதில் வியப்பில்லையே.

மொய்னிஹன் ஏழை பங்காளன் எனப் பெயரெடுத்தவர். அமெரிக்காவிலுள்ள நீக்ரோக்கள், மற்றும் பல சிறுபான்மை இனத்தவரின் துயர் துடைக்கத் திட்டங்கள் வகுத்துத் தந்தார். இதையொட்டி ஆராய்ச்சிகள் பல புரிந்து The Politics of a Guaranteed Income, Beyond the Melting Pot என இரு நூல்களும் 'நீக்ரோ குடும்பம், நாடு தழுவிய பணி தேவை' என்ற ஓர் அறிக்கையும் சமர்ப்பித்துள்ளார்.

நகைச்சுவை விஷயத்திலும் சளைத்தவரல்ல. ரஷ்யப் பிரதிநிதி ஒருவர், "அமெரிக்க அரசாங்கத்துக்கு எதிராகத் தொழிலாளர் யூனியன்களின் கிளர்ச்சிகள் அடிக்கடி நிகழ்கின்றனவே" என்று இடித்துக் காட்டினார். உடனே டாக்டர் மொய்னிஹன், "இவ்விஷயம் உங்கள் கவனத்தைக் கவர்ந்ததில் வியப்பில்லை; ருஷ்யாவில் தொழிலாளர் கிளர்ச்சி கடைசியாக நடந்தது 1917ல் அல்லவா!" என்றார்.

சற்றும் நாமறியாமல் பளிச்சென்று பதிலடி கொடுத்த போதிலும் மொய்னிஹன் சிந்திப்பதற்கென்றே நேரம் ஒதுக்கிக் கொள்வதும் உண்டு. சமீப காலமாக நம் நாட்டின் பொது வாழ்வில் அரிதாகி வரும் விஷயமில்லையா இது!

இவருக்குப் பொழுதுபோக்குகள் மீன் பிடித்தல், உலாவுதல். இவர் மனைவி ஓர் ஓவியர். சிற்பியும் கூட. பிள்ளைகள் மூவர்.

பாரத — அமெரிக்க உறவு அவ்வளவாகச் சுமுகமாக இல்லாத வேளையில் வந்துள்ள மொய்னிஹனுக்கு நிறைய வேலைகள் இருக்கும். நற்பணிகளாக அவை நிறைவேறட்டும்.

படம்: புதுதில்லியில் வந்திறங்கியதும் பத்திரிகை நிருபர்களின் படையெடுப்பு.

வாய் நாற்றம் உங்களை
விலகி நிற்கச்செய்கிறது




## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே,
வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள்
மற்றெந்த பற்பசையையும்விட,
கால்கேட் பற்பசையையே
வாங்குகிறார்கள்!**





# சத்திய வெள்ளம்

## நா. பார்த்தசாரதி

### முப்பத்தாறாவது அத்தியாயம்

அவர்கள் எல்லாரும் வண்டியூர் மாரியம்மன் கோவிலிலிருந்து திரும்பும் போது பகல் ஒன்றரை மணிக்கு மேல் ஆகிவிட்டது. மணவாளன் வீட்டில் பகல் உணவுக்குத் திரும்பி வருவதாகச் சொல்லி யிருந்தும் பாண்டியனால் அங்கே போக முடியவில்லை. நாயுடுவும் கண்ணுக்கினியாளும் அவள் தாயும் வற்புறுத்தி அவனைத் தங்கள் வீட்டிலேயே சாப்பிடச் செய்து விட்டார்கள். சாப்பிட்டு முடிந்தவுடன் கூட நாயுடு அவனை உடனே போக விடவில்லை. சிறிது நேரம் இருக்கச் சொன்னார்.

''இப்போ என்ன அவசரம் அப்படி? உண்ட வீட்டில் இரண்டு நிமிஷம் உட்காராமல் போகக் கூடாதும்பாங்க... இரு.... போகலாம்'' என்றார் அவர். அவனாலும் மறுக்க முடியவில்லை.

பகல் இரண்டரை மணி பஸ்ஸில் ஊருக்குப் புறப்பட எண்ணியிருந்த அவன் சித்திரக்காரத் தெருவில் கண்ணுக்கினியாளின் வீட்டிலிருந்து புறப்படும்போதே இரண்டரை மணி ஆகி விட்டது. அவன் மணவாளனின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தபோது அங்கே மணவாளனின் உறவினரும் ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நீதிபதியும் ஆகிய ஒருவர் வந்திருந்தார். அந்த முதியவருக்குப் பாண்டியனை அறிமுகம் செய்து வைத்தார் மணவாளன். இளைஞர் இயக்கங்கள், மாணவர் போராட்டங்கள் பற்றித் தம்முடைய கருத்தை அந்த முதியவர் மனம் திறந்து கூறினார். முதியவரானாலும் அவர் மனம் இளமையாயிருந்தது.

''இட்ஸ் ஆல் தட் தி யூத் கேன் டு ஃபார் தி ஓல்ட் — ட்டு ஷாக் தெம் அண்ட் கீப் தெம் அப் டு டேட்'' என்று பெர்னார்ட் ஷா கூறியிருப்பதைச் சிரித்துக் கொண்டே சொன்னார் அவர். அதைக் கேட்டு அவர்களும் சிரித்தனர்.

''முதியவர்களுக்கு அதிர்ச்சி யளிக்கவும், அவர்களை அப் — டு — டேட்டாக இருக்கச் செய்யவுமாவது எங்களால் முடியும் என்று நீங்கள் கூறுவதைக் கேட்க மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்று மணவாளன் அவருக்கு மறுமொழி கூறினார். பிற்பகல் நான்கு மணி வரை அவர்கள் எல்லாருமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். மாணவர்கள் — கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் பற்றிய பிரச்னைகளே பெரும்பாலும் பேச்சில் இடம் பெற்றன. துணைவேந்தர்களாக வருகிறவர்கள் பதவி நீடிப்பை எண்ணி அரசாங்கங்களின் தாசானுதாசர்களாகி விடுவதைக் கண்டித்தார் அந்த முதியவர்.

நாலரை மணிக்கு மணவாளன் குடும்பத்தினரிடம் விடைபெற்றுக் கொண்டு அந்த முதியவர் புறப்பட்டுப் போன பின் பாண்டியனும் பஸ் நிலையத்துக்குப் புறப்பட்டான். மணவாளனும் அவரைப் பார்க்க அப்போதுதான் வந்த உள்ளூர் மாணவர்கள் சிலரும் இரயில்வே மேம்பாலத்து வழியே 'வாக்கிங்' போக இருந்தார்கள். போகிற வழியில் பஸ் நிலையத்தில் பாண்டியனை வழி அனுப்பிவிட்டுப் போனார்கள் அவர்கள்.

போனதும் ஏறிப் புறப்படுகிறாற்போல் விருதுநகர் பஸ்தான் தயாராயிருந்தது. அசதி காரணமாக பஸ்ஸில் அவன் நன்றாகத் தூங்கி விட்டான். விருதுநகர் வந்ததும் யாரோ எழுப்பினார்கள். இறங்கி பஸ் மாறிக் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தபோது அப்படியும், இப்படியுமாக இரவு எட்டு மணிக்கு மேல் ஆகியிருந்தது. பாலவநத்தம் கிராமம் எட்டு மணியளவிலேயே உறங்கியிருந்தது. இரவிலும் காலதாமதமாக உறங்கி விடியலிலும் காலதாமதமாக எழும் நகரங்களை விட இரவில் விரைவாக அடங்கி அதிகாலையிலும் விரைவாக எழும் இந்தியாவின் கிராமங்கள் பரவாயில்லை என்று பெருமைப்படலாம் போலிருந்தது. அவன் போனபோது வீட்டில் எல்லோரும் உறங்கி யிருந்தார்கள். ஆத்தாளை எழுப்பி ஏதோ சாப்பிட்டோம் என்று பேர் பண்ணி முடித்து விட்டு அவனும் படுக்கச் சென்றான். காலையில் அவன் எழுந்திருந்து திண்ணைப் பக்கம் வந்தபோது அவனுடைய தந்தையும் பக்கத்து வீட்டு சன்னாசித் தேவரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். "ஏண்டா பொங்கலுக்கு வந்ததுதான் வந்தே, லீவு விட்டதுமே புறப்பட்டு வரப் படாது? கூட ஒரு வாரம் இருக்கலாமே? வேலை மெனக்கெட்டுப் 'போயி மூணு நாளைக்காகப் பஸ்காரனுக்குப் பணம் செலவழிச்சிருக்கியே?" என்றார் தந்தை. "இந்தக் காலத்துப் புள்ளைங்க அப்பிடியெல்லாம் யோசிக்கிற வழக்கமே கிடையாது சுப்பையாத் தேவரே! ஆயிரம் பத்தாயிரம்னு செலவழிச்சு மகாநாடு அது இதுன்னு போட்டுக்கிட்டிருக்கான் உம்ம பையன்? அவங்கிட்டப் போயி பதினைஞ்சு ரூபாச் செலவைப் பெரிசாச் சொல்லி வருத்தப்படறீரே நீரு?" என்று குறுக்கிட்டு வம்பு மூட்டினார் சன்னாசித் தேவர். அங்கே மேலும் நின்றால் சன்னாசித் 'தேவர் ஏதாவது வாயைக் கிண்டுவார் என்று தயங்கிய பாண்டியன் வாயிற்புறத்து வேப்ப மரத்தில் ஒரு குச்சி ஒடித்துக் கொண்டு கிணற்றடிக்குப் போனான்.

மறு நாள் போகி, அடுத்த நாள் பொங்கல், அதற்கடுத்த நாள் மாட்டுப் பொங்கல். மூன்று நாட்களையும் கழித்துவிட்டு எப்போது மறுபடி மதுரை போய்ச் சேருவோம் என்று தவிப்பாயிருந்தது அவனுக்கு. அவன் கொல்லைப்புறம் கிணற்றடிக்குச் சென்றபோது அய்யாவு மாட்டுக் கொட்டத்துக்கு வெள்ளை அடித்துக்கொண்டிருந்தான். பத்து நிமிஷங்களுக்குப் பின் அவன் கிணற்றடியிலிருந்து மீண்டும் வாயிற்புறம் வந்தபோது கிராமத்து இளைஞர்கள் பத்துப் பன்னிரண்டு பேர் அவனைப் பார்ப்பதற்காக வந்து காத்திருந்தார்கள். பாண்டியன் அவர்



கனை வரவேற்றான். ''பாலவநத்தம் இளைஞர் தமிழ் மன்றத்தின் சார்பாகப் பொங்கல் விழா நடத்தவும், ஒரு கவியரங்கம் அமைக்கவும் ஏற்பாடு செய்துக்கிட்டிருக்கோம்! அண்ணனும் அதில் கலந்துக்கிடணும்'' என்று வேண்டினர் அவர்களில் ஓர் இளைஞர். '''தமிழ் வளர்த்த வள்ளல்கள்' என்பது கவியரங்கத்தின் தலைப்பு. நீங்க யாரைப் பற்றிப் பாடப் போறீங்க?'' என்று அவர்கள் கேட்டபோது, ''நான் பாண்டித்துரைத் தேவரைப் பற்றிப் பாடறேன்'' என்றான் பாண்டியன்.

''இல்லே! நாங்க எல்லோரும் இந்தக் காலத்துப் பிரமுகர்களைப் பற்றித்தான் பாடப் போறோம். நீங்களும் இந்தக் காலத்துப் பிரமுகர் யாரையாவது பற்றிப் பாடுங்களேன்'' என்று கேட்டார் அந்த இளைஞர்களில் ஒருவர்.

''நீங்க தமிழை வளர்த்தவங்களைப் பற்றித்தான் கவியரங்கம்னு சொன்னீங்க. அதுனாலேதான் நான் பாண்டித்துரைத் தேவரைப்பற்றிப் பாடறேன்னு சொன்னேன். நீங்க 'தமிழாலே வளர்ந்த'வங்கன்னு தலைப்பை மாற்றிக்கொண்டால் நான் இந்தக் காலத்திலே இருக்கிற யாரைப் பற்றியும் பாடலாம்'' என்று உடனே அந்த இளைஞருக்கு மறுமொழி கூறினான் பாண்டியன். இதைக் கேட்டு அந்த இளைஞர்களில் பலர் சிரித்து விட்டார்கள். அவர்கள் பேசிவிட்டுப் போன பின் பக்கத்து வீட்டுச் சன்னாசித் தேவர் அவனைக் கூப்பிட்டுத் தம் அருகே உட்காரச் சொன்னார். அப்படி அவர் கூப்பிட்டபோது பாண்டியனின் தந்தை திண்ணையிலிருந்து உள் வீட்டுப் பக்கமாக எழுந்து போயிருந்தார்.

''தம்பி! நாளன்னைக்கு நம்ம தலைவரு ஒருத்தர் இங்கே வரப் போறாரு. அவரு உன்னையும் சந்திக்கப் பேசணும். பகல்லே எங்கேயும் போயிட மாட்டியில்ல......? வீட்டிலேதானே இருப்பே?'' என்று கேட்டார் சன்னாசித் தேவர். பாண்டியன் பதில் சொல்லத் தயங்கினான். சன்னாசித் தேவரின் உள் நோக்கம் என்னவாக இருக்கும் என்பதை அவனால் உடனடியாக அனுமானம் பண்ணிவிட முடியாமலிருந்தது. சிறிது வியப்பு உணர்ச்சியடைந்த மன நிலையுடன், ''யாரு வாராங்க? எதுக்காக இங்கே வாராங்க? நான் ஏன் அவரைப் பார்க்கணும்னு முன்னாடியே சொல்லிட்டீங்கன்னா நல்லது'' என்று சன்னாசித் தேவரைக் கேட்டான் பாண்டியன். ''அதையெல்லாம் பத்தி இப்ப என்ன தம்பி? நீ அவரைச் சந்திக்கப் பேசணும்னு நான் ஆசைப்படறேன்.''

''சந்திக்கிறதைப் பற்றி ஒண்ணுமில்லே... ஆனா அது எதுக்குன்னு தெரியணும்.''

''அதெல்லாம் இப்பக் கேட்காதே, தம்பி! அவரு நாளன்னைக்குப் பகல்லே இங்கே வாராரு. நீ அவரைப் பார்க்கிறே'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார் சன்னாசித் தேவர். பாண்டியனுக்கு அந்த விஷயம் பெரும் புதிரா யிருந்தது, சந்தேகமாகவும் இருந்தது. சன்னாசித் தேவரின் சார்புகளும் விருப்பு



வெறுப்புக்களும் அவனுக்கு நன்கு தெரியுமாகையால்தான் அவன் அதைப் பற்றிச் சந்தேகப்பட்டான். அடுத்த நாள் காலையிலும் மறுபடியும் இதை நினைவூட்டினார் சன்னாசித் தேவர். மறு நாள் காலையில் பொங்கல் விழாக் கவியரங்கம் முடிந்து அவன் வீடு திரும்பியதும் தந்தையோடு சேர்ந்து உட்கார்ந்து வீட்டில் பண்டிகைச் சாப்பாடு சாப்பிட்டான். சாப்பிட்டு முடிந்ததும் தந்தையும், வேலையாள் அய்யாவும் மாட்டுப் பொங்கலுக்காகக் கொட்டத்தில் உள்ள மாடுகளின் கொம்புகளுக்கு வர்ணம் பூசப் போய் விட்டார்கள்.

''ஐயா வந்திட்டுப் போகச் சொன்னாக'' என்று அப்போது சன்னாசித் தேவர் மகள் கருப்பாயி வந்து கதவோரமாக நின்று அவனைக் கூப்பிட்டாள்.

''ஏ கருப்பாயி! அதென்ன வாசப்புறமா நின்னே சொல்லிப்பிட்டு ஓடப் பார்க்கிறே? உங்க வீட்டுக்கு வழி அண்ணனுக்குத் தெரியும். நீ உள்ளார வந்திட்டுப் போ!'' என்று பாண்டியனின் தங்கை மாரியம்மாள் அவளை உள்ளே கூப்பிட்டாள். தானும் தந்தையும் சாப்பிட்டு முடிந்த பின் தாயும் தங்கையும் சாப்பிடும்போது அருகில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த பாண்டியன் தன்னைத்தான் கருப்பாயி கூப்பிடுகிறாள் என்று தெரிந்ததும், ''உண்ட இறக்கம். கொஞ்சம் தூங்க விடாம நீ கூப்பிட வந்திட்டியாக்கும்?'' என்று கேட்டுக் கொண்டே புறப்பட்டான். சன்னாசித் தேவர் வீட்டுக் கூடத்தில் ஆளும் கட்சியின் மாணவர் இயக்கப் பிரமுகர் ஒருவர், உள்ளூர் நண்பர்கள் சூழ அமர்ந்திருந்தார். அவரைப் பார்த்ததுமே, பாண்டியனுக்கு அங்கே என்ன நடக்கும் என்பதை அநுமானித்துக் கொள்ள முடிந்தது. எல்லாருமே மிகவும் பிரியமாகவும், அன்பாகவும் பாண்டியனை வரவேற்றார்கள். பிரமுகர் அவனோடு பேசலானார்:

''இன்று காலையில் இங்கே நடந்த கவியரங்கத்தில் நீங்கள் பாடிய கவிதை ரொம்ப நன்றா யிருந்ததாக எல்லாருமே இவ்வளவு நேரம் பாராட்டிச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். எனக்கு மகிழ்ச்சியா யிருந்தது.''

இதைக் கேட்டுப் பாண்டியன் சிரித்துக்கொண்டே வேறெதுவும் பேசாமல் இருந்து விட்டான்.

''உங்கள் நண்பர் மாணவர்களின் தலைவர் - மணவாளன் எப்படி இருக்கிறார்?''

''அடேடே! மணவாளனை உங்களுக்குத் தெரியுமா?''

''எதிரெதிர் முகாம்களில் இருந்தாலும் அவரை நான் மதிக்கிறேன். அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்.''

பாண்டியன் தனக்குள் சிரித்துக் கொண்டான். அந்தப் பிரமுகர் மெல்ல மெல்லத் தாம் வந்த காரியத்தை நினைவுகூர்ந்தவராய் மீண்டும் அவனிடம் பேசத் தொடங்கினார்.

''நேற்றுத்தான் சன்னாசித் தேவர் 'டிரங்கால்' போட்டுச் சொன்னார். உங்களைப் பற்றி ரொம்ப நம்பிக்கையோடு புறப்பட்டு வந்திருக்கிறேன்.''

''.... தேவர் உங்களிடம் 'டிரங்காலில்' என்ன சொன்னாரென்று எனக்குத் தெரியாது. நான் அவரிடம் எதுவும் சொல்லவில்லை. அவரும் உங்களோடு ஃபோனில் பேசியதை என்னிடம் சொல்லவில்லை. நீங்கள் வரப் போகிறீர்கள்... சந்திக்க வேண்டும் என்று மட்டும்தான் சொன்னார்.''

''பரவாயில்லை! மற்றதை நேரில் சொல்லத்தான் இப்போது நானே வந்து விட்டேனே. தேவர் எங்கள் அணியில் இருக்கிறார். அவர் எங்கள் அன்புக்குரியவர். அவருக்குப் பக்கத்து வீட்டுக்காரரின் புதல்வராகிய நீங்களும் எங்கள் அன்புக்குரியவர்....''

''.......''

''மாணவர் போராட்டம் அது இதுன்னு நீங்க தீவிரமா யிருக்கிறதனாலே உங்க எதிர்காலம் பாதிக்கப் படும்கிறது உங்களுக்குத் தெரியுமா? நீங்க கொஞ்சம் நடுநிலையா விலகி இருக்கணும். அதனாலே உங்களுக்கு அதிக நன்மை உண்டு.''

''எது நடுநிலை? நன்மைக்கும் தீமைக்கும் நடக்கிற போரில் இரண்டிற்கும் நடுவே நிற்பது நடுநிலைமை இல்லை. அது கையாலாகாத்தனம். தீமையைச் சாராமல் நன்மையின் பக்கம் சார்ந்து நிற்பதே நடுநிலை. இன்று இந்த நாட்டில் நடுநிலை என்ற பதமே பிழையான அர்த்தத்தில் புரிந்து கொள்ளப்பட்டிருக்கிறது. போர்க் களங்களில் நடுநிலைக்கு இடமே இல்லை. தீயவர்களை எதிர்க்கும் போரில் நல்லவர்கள் பக்கம் நிற்பது தான் நடுநிலை.''

''தம்பி பொருளாதார மாணவரா யிருந்தும் உங்களுக்கு இவ்வளவு நல்ல தமிழறிவு இருப்பதை நான் பாராட்டுகிறேன். மிக அருமையாக விவாதிக்கிறீர்கள்...''

''அதெல்லாம் இருக்கட்டும்! என்னைக் கூப்பிட்டனுப்பிய காரியத்தைச் சுருக்கமாகச் சொல்லுங்கள். எனக்கு




செழுமையிற் சிறந்த இனிய பழச்சுவை உடையது ரெக்ஸ் ஜெல்லி - குழந்தைகள், முதியோர் யாவரும் விரும்புவார்கள். எல்லா சமயங்களுக்கும் ஏற்ற பல்வேறு வகையான புடிங்குகளையும் பழத் தின்பண்டங்களையும் தயாரிக்க உதவுகிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டதால், ஜெல்லி படிகங்களிலேயே மிகச் சிறந்தவை ரெக்ஸ் ஜெல்லி படிகங்கள்.






# சுவைமிக்க பழத் தின்பண்டம் தயாரிக்க 5 எளிய நிலைகள்.

- 1 பாக்கெட் ரெக்ஸ் ஜெல்லி படிகங்களை வென்னீரில் கரைக்கவும்.
- போதுமான குளிர்ந்த நீர் சேர்த்து, கலவையை 570 மி.லி. (1 பைண்ட்) ஆக்கவும்.
- அச்சில் வார்க்கவும்.
- ரெப்ரிஜரேட்டரிலோ அல்லது பனிக்கட்டிமீதோ வைத்துப் படியவிடவும்.
- பசுமையான க்ரீமுடன் பரிமாறவும்.

தேர்ந்தெடுக்க நாவில் நீர் ஊறும் 6 நறுமணச் சுவைகள்.

உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.

**ரெக்ஸ்** ஜெல்லி படிகங்கள்

இலவசம்! பிரவுன் & போல்ஸன் பக்குவமுறை நூல் நெ. 5. தயவுசெய்து இன்றே ஒரு பிரதிக்கு எழுதுக.



பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட்
கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரை. லிட்,
ஸ்ரீனிவாஸ ஹவுஸ்,
எச். சோமானி மார்க்,
பம்பாய் 400001.

வேலை இருக்கிறது. நான் போக வேண்டும்....''

''பொங்கல் விடுமுறை முடிந்ததும் ஒரு நாள் பல்கலைக் கழகத்துக்குப் போய் அட்டெண்டன்ஸ் கொடுத்துவிட்டு அப்புறம் லீவு எடுத்துக் கொண்டு வந்து விடுங்கள்... நீங்கள், நான், தேவர் எல்லாருமாகக் காஷ்மீர் வரை உல்லாசப் பயணம் போய் வரலாம்.''

''உங்களை எனக்குப் புரிகிறது ! ஆனால்....?''

''என்ன புரிகிறது அப்படி?''

''எல்லாமே நன்றாகப் புரிகிறது! நீங்கள் யாரால் எதற்காக அனுப்பப்பட்டு இங்கே வந்திருக்கிறீர்கள் என்றெல்லாம் புரிகிறது. ஏற்கெனவே பலர் எங்களிடம் இப்படி முயற்சிகளைச் செய்து பார்த்த பின்புதான் நீங்கள் வந்திருக்கிறீர்கள். உங்கள் முயற்சி பலிக்காது. பட்டமளிப்பு விழாவன்று எல்லா மாணவர்களும் மல்லிகைப் பந்தலில்தான் இருப்போம். எங்களுடைய எதிர்ப்பையும் தெரிவிப்போம்.''

''வீண் முரண்டு பிடித்துப் போலீஸ்காரர்களிடமும் எங்கள் கட்சி ஆட்களிடமும் சிக்கித் துன்புறப் போகிறீர்கள்! சுருக்கமாக இவ்வளவுதான் உங்களை எச்சரிக்க முடியும்.''

''சுருக்கமாக எச்சரித்தாலும், விரிவாக எச்சரித்தாலும் உங்களுக்கு என் பதில் இதுதான். எங்களை விலைக்கு வாங்கிவிட நாங்கள் கோழைகள் அல்ல.''

''நீங்கள் என்னோடு இன்றே புறப்பட்டு வந்தால் சென்னையில் அமைச்சர் கரியமாணிக்கத்தையே சந்தித்து இது விஷயமாகப் பேசலாம். அவர் மாணவர்களை உயிரினும் உயிராக மதிக்கிறவர்.''

''அவர் மற்றவர்களை எப்படி மதிக்கிறவர் என்பது எங்களுக்குப் பலமுறை நிரூபிக்கப் பட்டிருக்கிறது. நீங்கள் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. எங்களில் பலர் அவரால் நிறையத் துன்பங்களை அநுபவித்து விட்டோம்.''

''உங்கள் முடிவான பதில் இதுதானா? இதற்குத்தானா நான் முந்நூற்றைம்பது மைல் பயணம் செய்து ஆவலாக இங்கே ஓடி வந்தேன்?''

''தெரிந்திருந்தால் நானே உங்களை வரவேண்டாம் என்று சொல்லியிருப்பேன். நீங்கள் என்னைப் பார்ப்பதற்காகவே வருவதாகத் தேவரும் என்னிடம் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் தடுத்திருக்கலாம்.''

அவன் எழுந்திருந்து வெளியே வந்து விட்டான். சன்னாசித் தேவர் கூடவே வாயில் வரை ஓடி வந்து. ''இத்தினி பெரிய மனிசன் காரிலே மெட்ராசிலேயிருந்து புறப்பட்டு வந்திருக்கான். கொஞ்சம் இரக்கம் வேணும் தம்பீ!'' என்று கெஞ்சினார். பாண்டியன் நிற்கவில்லை. அவன் தன் வீட்டுக்குள் போய் நுழைந்ததும், ''பக்கத்து வீட்டுத் தேவரு ஏன் கூப்பிட்டாராம்?'' என்று கேட்டாள் தாய். ''அது வேறே விஷயம். உனக்குப் புரியாதும்மா!'' என்று சுருக்கமாகப் பதில் சொல்லி விட்டுக் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான் அவன். சிறிது நேரம் கழித்து அவனுடைய தந்தையும், சன்னாசித் தேவருமாகச் சேர்ந்து அந்த ஆளும் கட்சிப் பிரமுகருடன் வந்து அவனை மீண்டும் நிர்ப்பந்தப்படுத்தினார்கள். அவன் மசியவில்லை. பொங்கலுக்கு அங்கே வந்திருக்கவே வேண்டாம் என்று இப்போது தோன்றியது அவனுக்கு. மாலையில்

## சத்திய வெள்ளம்

நன்மைக்கும் தீமைக்கும் நடக்கிற போரில் இரண்டிற்கும் நடுவே சும்மா நிற்பது நடுநிலைமை யில்லை. அது வெறும் கையாலாகாத் தனமே. தீமையைச் சாராமல் நன்மையின் பக்கம் சார்ந்து நிற்பதே நடு நிலைமையாகும்.



விருதுநகருக்குப் போய் அங்கே ஒரு தேசிய நண்பரின் வீட்டிலிருந்து மதுரைக்கு ஃபோன் செய்து மணவாளனிடம் பேசினான் பாண்டியன். மணவாளன் சொன்னார்: ''எப்படியாவது பட்டமளிப்பு விழா அமைதியாக நடந்து டாக்டர் பட்டத்தைக் கரகோஷங்களுக்கிடையே வாங்கி விடவேண்டும் என்ற தவிப்பில் அமைச்சர் கரியமாணிக்கம் நாலாபுறமும் ஆட்களை ஏவியிருக்கிறார். எந்த எல்லைவரை முயல முடியுமோ அந்த எல்லை வரை முயன்று பார்க்கிறார்கள். நீ சீக்கிரம் புறப்பட்டு இங்கே வந்துவிடு! கிராமத்தில் இன்னும் யாராவது தேடி வந்து உன்னை வற்புறுத்தவோ, பயமுறுத்தவோ செய்தால் கூட நான் ஆச்சரியப்படமாட்டேன். இனி இங்கே எதுவும் நடக்கும்.''

உடனே அவனும் மறுநாள் 'மாட்டுப் பொங்கலன்று பகல் சாப்பாட்டை முடித்துக் கொண்டு புறப்பட்டு வந்து

## இரட்டிப்பு மகிழ்ச்சி!

18–2–73 'கல்கி' பத்திரிகையின் மேலட்டையில் எனது தங்கை மஞ்சுளா தேவியின் படத்தைப் பிரசுரித்துள்ளீர்கள். அதற்கு எங்களது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஆனால் அட்டைப்பட விளக்கத்தில் ''சிங்களப் பெண்'' என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது தவறு. படத்தில் உள்ள 'மஞ்சுளா தேவி' ஒரு தூய தமிழ்ப் பெண்ணாகும். அதன் வயது பத்து. அந்த வண்ணப் படத்தைப் பிடித்து உங்களுக்குத் தந்திருக்கும் என் தம்பி லோகநாதனும் தமிழனே!

பேலியகொட
இலங்கை — **நவநீதன்**
20 – 2 – 1973

**சிங்களச் சிறுமி என்று நினைத்து அட்டையில் வண்ணப்படம் பிரசுரித்தபோது மகிழ்ச்சி அடைந்தோமென்றால் மஞ்சுளா தேவி தமிழ்ப் பெண் என்று அறிந்ததிலும், கடிதம் மூலமாகச் சகோதரர்கள் நவநீதனையும் லோகநாதனையும் அறிமுகம் செய்து கொண்டதிலும் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைகிறோம். - ஆசிரியர்**

விடுவதாக' அவரிடம் தெரிவித்துவிட்டு ஃபோனை வைத்தான். ஆனால் மாட்டுப் பொங்கலாகிய மறுநாள் காலையே அவனுக்கு மல்லிகைப் பந்தலிலிருந்து எதிர்பாராத விதமாக ஒரு தந்தி கிடைத்தது. அந்தத் தந்தி மல்லிகைப்பந்தலில் முதல் நாள் இரவு பதினொரு மணிக்குக் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிந்தது. 'அண்ணாச்சியைப் போலீஸார் கைது செய்திருப்பதாகவும் — அவன் உடனே புறப்பட்டுவர வேண்டும்' என்றும் தந்தி வாசகம் இருந்தது. அவன் அந்தத் தந்தியைப் படித்து அதிர்ச்சி அடைந்தான். அவனால் அதை நம்பமுடியாமல் இருந்தது. மாணவர்களிடையே சில வேளைகளில் குறும்புக்காகவும், வம்புக்காகவும் பொய்த் தந்திகள் கொடுத்து அலைக்கழிக்கும் பழக்கம் உண்டு. தமிழ் மன்றத்தின் சார்பில் பேச அழைக்கப்படும் ஒரு பேச்சாளரை — அந்தப் பேச்சாளரைப் பிடிக்காத வேறு சில மாணவர்கள், 'ஃபங்ஷன் போஸ்ட் ஃபோண்டு' என்று பொய்த் தந்தி கொடுத்து வரவிடாமல் செய்துவிடுவது போன்ற காரியங்கள் சகஜமாக நடப்பது உண்டு. ஆனால் அண்ணாச்சி விஷயத்தில் அப்படி யாரும் பொய்த் தந்தி கொடுத்திருக்க முடியாது என்பதிலும் பாண்டியன் நம்பிக்கை கொள்ள வேண்டியிருந்தது. தந்தியில் அதைக் கொடுத்தவர் பெயரும் இருந்தது. தேசியத் தோட்டத் தொழிலாளர் யூனியனின் செயலாளர் ஒருவர் தந்தியைக் கொடுத்திருந்ததால் அதை அவ்வளவு சுலபமாகப் புறக்கணித்துவிடவும் முடியவில்லை. ஒருவேளை தோட்டத் தொழிலாளர் யூனியனின் செயலாளருடைய பெயரை வைத்துத் தந்தி கொடுத்தால்தான் நம்பிக்கை இருக்கும் என்று அவர் பெயரைப் பயன்படுத்தி விஷமிகள் யாராவது பொய்த் தந்தி கொடுத்திருக்கக் கூடுமோ என்றும் சந்தேகமாயிருந்தது.

''என்னடா அது? என்ன தந்தி?'' என்று தந்தியைப் பற்றி விசாரித்தார் அவன் தந்தை. தாயும் அதே கேள்வியோடு நிலைப்படியருகே வந்து தயங்கி நின்றாள். அவர்களிடம் தந்தியிலிருப்பதை அப்படியே கூறாமல், ''ஒண்ணுமில்லை! ஒரு நெருங்கிய சிநேகிதனுக்கு உடம்பு சொகமில்லே. அதைப் பற்றி வந்திருக்கு. ரொம்ப வேண்டியவன். நல்லவன். உடனே புறப்பட்டுப் போகணும்'' என்று மாற்றிச் சொல்லிவிட்டுப் புறப்பட்டான் அவன். நல்ல வேளையாக அவனுடைய அவசரத்துக்கு ஏற்றாற்போல் விருதுநகரிலிருந்து எக்ஸ்பிரஸ் பஸ்ஸே கிடைத்ததனால் விரைவாக மதுரைக்குப் போய்ச் சேர்ந்துவிட முடிந்தது. மதுரையை அடைந்ததும் நேரே மணவாளனின் வீட்டுக்குத்தான் போனான் அவன். மணவாளனின் தந்தைதான் வீட்டு முகப்பில் அவன் போனபோது வரவேற்பறையில் அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தார். அவனை வரவேற்று முகமலர்ந்த அவரிடம், தந்தியைக் குறிப்பிட்டு அவன் சொல்லியவுடன்,

''ஆமாம்! அதே தந்தி இங்கேயும் இராத்திரி மூன்று மணிக்கே கிடைச்சு உடனே ஒரு டாக்சி ஏற்பாடு பண்ணிக் கொண்டு மணவாளன் புறப்பட்டுப் போயாச்சே'' என்றார் அவர். அவரிடம் சொல்லிக் கொண்டு மல்லிகைப் பந்தலுக்குப் போவதற்காக மீண்டும் பஸ் நிலையத்துக்கே திரும்பினான் பாண்டியன். அப்போதிருந்த கவலையிலும், அவசரத்திலும், பரபரப்பிலும் சித்திரக்காரத் தெருவுக்குச் சென்று கண்ணுக்கினியாளிடம் அந்தத் தகவலைக் கூற வேண்டும் என்று கூட அவனுக்குத் தோன்றவில்லை. எப்படியும் இயல்பாகவே அவள் இன்னும் இரண்டு நாட்களில் யூனிவர்ஸிடி திறக்கிற தினத்தன்று மல்லிகைப் பந்தலுக்கு வந்து விடுவான் என்பதனால் அவன் மட்டும் அவசரமாகப் புறப்பட்டான்.

(தொடரும்)




# இரட்டை வேடப் படங்கள் இரண்டு

மற்றொரு ஜூனியர்: அக்கா!

ஹேமமாலினி: தம்பி! பொல்லாத பயல் நீ! என்னைப் போலவே இரட்டை வேடம் போட்டு ஜமாய்ச்சுட்டியே!

ம. ஜூ: இந்த இரட்டை வேடம் படங்கள் எத்தனை வந்திருக்கும்? கதைக்கு இப்படி ஒரு பஞ்சம் வந்து விட்டதே! ஆட்சியினர் அரசர்களையும் அரச மான்யங்களையும் அழிக்க முன்வந்தாலும் சினிமாத் துறையினர் அரசர்களை ஒழிக்க முன்வரவில்லை. கொடுங்கோலர்களை முறியடித்து 'நல்லவர்கள் கெடுவதில்லை நானிலத்தின் தீர்ப்பு' என்று கொண்டு முடிக்கின்றனர், வழக்கமான பாட்டையிலே.

ஹே: கதைக்குப் பஞ்சம் என்றாலும் கற்பனைக்குப் பஞ்சமில்லை. எத்தனை புதும் புதுச் சூழ்நிலைகளைச் சிருஷ்டித்திருக்கிறார்கள். அதற்காகப் பாராட்ட வேண்டாமோ? கதை எப்படி இருந்தாலும் நல்லா நடிச்சிருக்கே நீ! அரச குமாரனைக் காட்டிலும் லல்லு வேஷத்திலே பிரமாதம்!

ம. ஜூ: நீயும் சீதாவைக் காட்டிலும் கீதாவாகத் தான் சக்கைப் போடு போட்டிருக்கே! அதோடு நாம இரண்டு பேருமே அடிச்சே பேர் வாங்கியிருக்கோம்! வாத்தியார்களுக்கே வாத்தியார்களாகி யிருக்கோம்!

ஹே: நீ நடிச்ச 'உஸ்தாத் பெட்ரோ'விலே ஷேக் முக்தார் தம் கம்பீரத் தோற்றத்தாலும் நடிப்பாலும் பெயர் வாங்கியிருக்கிறார் என்றால்....

ம. ஜூ: நீ நடித்த 'சீதா ஔர் கீதா'விலே மனோரமா கொடுமைக்காரச் சித்தியாக நடித்து நடிப்பின் சிகரத்தைக் காட்டி யிருக்கிறார்!

ஹே: மெய்தான்! நானேகூடப் பயந்து விட்டேன், எங்கே நம்ம நடிப்பு எடுபடாமல் போய்விடுமோ என்று! பலே வில்லியாகத்தான் நடித்திருக்கிறார்; உன் படத்துக்கு ஜீவன் உயிர் ஊட்டியிருந்தபோல!

ம. ஜூ: உன் படத்திலேயும்தான் ரூபேஷ் குமார் வில்லன் பாத்திரத்துக்கு இலக்கணம் வகுத்துக் காட்டியிருக்கிறாரே! ஆனால் அக்கா! உனக்கு ஜோடியாக நடிக்கும் தர்மேந்திரா - சஞ்சீவ் குமார் பற்றி என்ன நினைக்கிறே?

ஹே: நல்லாத்தான் நடிச்சிருக்காங்க. - ஏன்? எதற்காகக் கேட்கிறே?

ம. ஜூ: அக்கா! பேச்சிலும் இரட்டை வேடம் போடாதே! சஞ்சீவ் குமார் கூடியவரையில் உனக்கு ஈடு கொடுத்து நடித்திருக்கிறார். தர்மேந்திரா சோபிக்கவில்லை.

ஹே: அதைச் சொல்றியா? கழைக் கூத்தாடியாக ஒரு பெண் நடிக்கிறபொழுது, கூடே கொட்டு மேளம் கொட்டும் ஆணை யாராவது அவ்வளவு கவனிப்பாங்களா?

ம. ஜூ: வாஸ்தவம்தான். அவர் வேலை சுளுவாய்ப் போச்சு.

ஹே: அவர் வேலை மட்டுமா? படம் எடுத்தவர், கதை எழுதியவர், நடித்தவர்களாகிய நாம் ஆகிய எல்லோருடைய வேலையுமே சுளுவாப் போச்சு! நமக்கு முன்னேயும் படங்கள் இருந்ததனாலே.

ம. ஜூ: உன் இந்தச் சுளுவுக்கே இவ்வளவு பேர் இருக்கே!

ஹே: உன் நடிப்பும் சோடை இல்லை, தம்பி! உன்னிடமுள்ள குழந்தைத்தனம் எனக்கு இல்லையே.

ம. ஜூ: உன்னிடமுள்ள 'ஸ்டைல்' எனக்கில்லையே! இன்னொரு வகையிலும் நீ அதிர்ஷ்டக்காரி அக்கா! நம்ம வீட்டுப் பெண்ணு மாதிரித் தமிழ் நாட்டிலும் நீ சக்கைப் போடு போட ஏற்பாடு நடக்கிறதாமே!

ஹே: ஹே ராம்!

ம. ஜூ: தப்பு, தப்பு! ஹரா கிராம்!

- ரா. வீ.

'பளிச்'சென்று' அக்கேஷியா சோப் போட்டு முகத்தை மூன்று தடவைகள் கழுவித் துடைத்து. கமகம வென்ற யார்ட்லிபவுடரை (ஸ்மாலின்டு... டப்பா ரூபாய் 24. டவுனில் ஒரு கடை.) பூசிக் கொண்டு தலையையும் பிரில்க்ரீம் போட்டு அழுந்த வாரிக்கொண்டு என் அறைக்குள் நுழைகிறேன். தம்புவைப் பார்த்துத் தலையாட்டுகிறேன். அவன், ''கோடி டேபிள்... ரெண்டு ஸ்பெஷல் மசாலா, ரெண்டு நெஸ் கேஃப்'' என்று 'சார்ஜ்' ஒப்பு வித்துவிட்டு வெளியேறுகிறான். இப்பொழுது நான் அந்த அறைக்கு, ''அம்மாச்சு கபே''யின் மேல் மாடியிலிருக்கும் 'குடும்ப அறை'க்கு 'இன் சார்ஜ்'. ஆமாம்... நானல்லவா அடுத்த ஒரு மணி நேரத்தில் வரப் போகும் கூட்டத்தைச் சமா ளிக்க முடியாமல் விழிக்கப் போகிறேன்?... நீங்கள் ஏன் விழிக்கிறீர்கள்?

ஓ....! சர்வராவது யார்ட்லி பவுடர் சந்தண சோப், பிரில்கிரீம் ஆகியவற்றை உபயோகிப்ப தாவது என்று விழிக்கிறீர்கள்... இல்லையா? இட் சீம்ஸ் ராதர் வெரி இன்க்ரெடிபிள்....இஸ் இண்டிட்? அடேடே! என்ன சார் இன்னும் பயங் கரமா முழிக்கிறீங்க? இங்கிலீஷிலே பொளக்க றானே இவன்னு பார்க்கிறீங்களா?

ஒரு சர்வர்னு, அவன் இப்படித்தான் இருப் பான், இருக்கணும்னு உங்களுக்கு ஒரு முடிவான அபிப்பிராயம் சார்... அதான் அப்படிப் பார்க்கி றீங்க. போகட்டும். உங்க காதிலே போட்டு வைக் கிறேன்.... நானும் ஒரு கிராஜு-வேட்தான்... பி.ஏ! பி.ஏ. படிச்சவன் இந்த உத்தியோகத்துக்கு ஏன் வரணும்னு யோசிக்கிறீங்களா? நீங்க என்ன சார்... மறுபடியும் மறுபடியும்.... பி. ஏ.படிச்ச வன்னு அவன் செக்ரடேரியட்டிலே கிளார்க்காத் தான் இருக்கணும்னு ஏதாவது சட்டமா என்ன?



எப்படி நான் இங்கே வந்து சேர்ந்தேன்னு...விதி அப்பமன்னு சொல்லுவாங்களே தெரியுமா உங்களுக்கு....... சர்வ வல்லமை வாய்ந்த அந்த ரெண்டு எழுத்துக்கள்தான், ரெண்டெழுத்துப் பட்டம் வாங்கின என்னை, அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் எண்ணற்ற உடுப்பி ஹோட்டல்கள் ஒன்றினுள் கொண்டு வந்து தள்ளியது. ஹோட்டல் முதலாளிக்கு நான் ஒரு பி.ஏ.ங்கிறது தெரியாது. ஏன்? யாருக்குமே தெரியாது. உங்க காதிலே மட்டும்தான் போட்டு வைச்சிருக்கேன். என் குவாலிபிகேஷனைச் சொன்னு இந்த வேலையும் அல்லவா சார், இல்லாமப் போயிடும்?

எனக்கு இந்த வேலை ரொம்பப் பிடிச்சிருக்கு சார்..... சர்வர்களுக்கெல்லாம் நான் 'கிங்' மாதிரி இங்கே.

அப்புறம் இன்னொரு விஷயம். எங்க ஹோட்டலுக்குப் பத்து கெஜம் தள்ளி ஒரு காலேஜ்.... குஜு குஜு, ஜிலுஜிலு காலேஜ்.... ஏர் கண்டிஷன் பண்ணினதாக்கும்னு நெனைச்சிக்கிடாதீங்க.... விமன்ஸ் காலேஜ்! மத்தியானம் டிபன், சாயந்திரம் காப்பி, டீ. எல்லா டயத்திலும் நம்ப ஹோட்டல்.... அடாடா.... எப்படி இருக்கும் தெரியுமா? இந்திர லோகம், சந்திர லோகம்னு சொல்லுவாங்க.....அங்கே அப்சரஸ்கள், கந்தர்வ கன்னிகைகள்ளாம் நடமாடுவாங்கன்னு கேட்டிருக்கேன், படிச்சிருக்கேன்.... சே! இங்கே நம்ப ஹோட்டலுக்கு வாங்க சார்....

பளிச் பளிச்சினு அவ்வளவு பெண்கள் ஒரேமுட்டா, ஒரே சமயத்துலே அந்தச் சின்ன இடத்துலே வந்து நிக்கறது. சாப்பிடறது, பேசறது, சிரிக்கிறது. மேலாக்கு வழிய வழிய அதைப் பத்தியே கவலைப்படாம கூல்டிரிங்கை உறிஞ்சறது...எல்லாமே.... என்னவோ எனக்கு வான வீதியிலே பறக்கற மாதிரி ஓர் உணர்ச்சி!

அதுங்க நம்ப டேபிள்லே வந்து உட்கார்ந்துகிட்டு ஆர்டர் குடுக்கறப்போ நான் ரொம்ப ரொம்ப மரியாதையா, கண்ணியமா, சிவாஜி, சமயத்துலே ஏழை வாலிபனா வர்ற கேரக்டர்கள்லே சிரிப்பாரு தெரியுமா.... ஆங்.... அது மாதிரி சிரிப்பேன்..... தப்பு.... புன்னகை பூப்பேன். அவுங்களுக்குத் தேவையான பண்டங்களைத் தட்டுக்கள்ளே எடுத்துக்கிட்டு ஒவ்வொரு வாட்டியும் அவுங்களை நெருங்கறப்போ.... ம்ஹூம்......

மணி ஒண்ணு அடிக்கப் போவுது..... அடேடே.... அதுக்குள்ளே இன்னைக்கு வந்துட்டாங்களே.... இன்னையிலேருந்து நான் மேல் ஃபாமிலி ரூம் இன்சார்ஜ்... எல்லாம் இங்கேதான் வருவாங்க.... ஹா... இது யார்... அவளா? ஆமாம்.. அவளேதான். என் இருதயம் திமர் என்று ஏன் வேகமாகத் துடிக்க ஆரம்பித்துவிட்டது? பிளேட்டும் கையுமாய் வந்து கொண்டிருந்த என்னைப் பார்த்திருப்பாளோ? ஆ... அதோ பார்த்து விட்டாள்! இவளும் இந்தக் காலேஜில்தான் படிக்கிறாளா....? இங்கே, இதுவரையிலும் வந்ததே கிடையாதே.....

வந்தவர்களை விசாரிக்கிறேன். அவள் ஒன்றும் பேசவேயில்லை. அவளுக்காக மற்றவர்கள்தான் ஆர்டர் பண்ணுகிறார்கள். என்னைப் பார்த்துத் தனியாகப் புன்னகை புரிகிறாள். எனக்கு



# ஸ்வீட் ஸ்டால் காந்தி சிரிக்கிறார்!

.கேசி.

வியர்த்துக் கொட்டுகிறது. என்ன கேட்கிறீர்கள்? அவன் யார் என்று?

எனக்கே தெரியாதே! போன வாரம் எங்கள் 'பிரேம' நாடகம் நூறாவது நாளைக் கொண்டாடிய போது மியூசிக் அகாடமி ஹாலில் முதல் வரிசையில் உட்கார்ந்து நாடகத்தை ரசித்துக் கொண்டிருந்தாள். [இது என்ன புது 'ரோல்' என்கிறீர்களா? நான் சர்வர் மட்டுமல்ல. ஓர் அமெச்சூர் நடிகனும் கூட. சிறு சிறு ஒட்டை உடைசல் பாத்திரங்கள் எனக்கு என்று எங்கள் குழுவில் வைத்திருப்பார்கள். அந்த நாடகத்தில் எனக்கு ஒரு சர்வர் ரோல். தலைமை தாங்கியவர், நான் அந்த ரோலைப் பிச்சு வாங்கிவிட்டதாகவும், இரண்டு மூன்று காட்சிகளிலேயே தோன்றினாலும் மனத்தில் நிற்கும்படி நடித்ததாகவும் பாராட்டினார். சைடிங்கிலிருந்து அவளைப் பார்த்தேன். அதற்குக் கைத் தட்டினாள் அவள்! பைத்தியக்கார மனுஷன்! அந்த ரோலைப் பிச்சு வாங்கிட்டேனாம். ஒரு சர்வர் அந்தப் பாத்திரமாகவே ஆகி நடிப்பது என்ன பிரமாதம்...? தினம் இங்கு எட்டு மணி அவதிப்படுவதை அங்கு சில காட்சிகளில் சில நிமிடங்கள் பட்டேன்....

டிபனை முடித்துக் கொண்டு எல்லோரும் கிளம்பி விட்டார்கள். தன் தோழிகளோடு அவளும் கிளம்பி விட்டாள். இத்தனை நேரமும் அவர்கள் சாப்பிட்டு அரட்டை அடித்துக் கொண்டிருந்த டேபிள்களை, வெறும் டேபிள்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அடேடே.... இது யார் கைப் பை? எடுக்க விரைகிறேன். அதற்குள் அவளே வந்துவிடுகிறாள்.... யார் என்கிறீர்களா? அவள்தான். என் நாடக ரசிகை.....

''தேங்ஸ்..... மறந்து வைத்துவிட்டேன். இங்கேதான் இருக்கீங்களா.....? அன்றைக்கு உங்க நடிப்பு அவ்வளவு பிரமாதமா இருந்தது. பின்னே நோ வொண்டர்'' என்றபடி களீர் என்று சிரிக்கிறாள் அவள். அப்பா... அந்தப் பற்களுக்குத்தான் எவ்வளவு பிரகாசம்..... நான் எங்கோ பறந்து கொண்டிருக்கிறேன். இந்தப் பையை மறதியாக விட்டுப் போனது நடிப்பு.... என்னுடன் தனியாய்ப் பேச இது ஒரு சாகசம்.... எனக்குப் பேச்சே வரவில்லை.....

சரியாய் ஒரு வாரம் கழித்து மறுபடியும் அவளை, அவள் கல்லூரியிலேயே சந்தித்தேன். பித்தம் தலைக்கேறிவிட்டதோ என்று நினைக்கிறீங்களா? அதுதான் இல்லை. அவர்கள் கல்லூரியில் ஒரு டீ பார்ட்டி. எங்கள் கபேயில் தான் ஆர்டர். நான்தான் மேஸ்திரி. முதலாளிக்கு உடம்பு சரியில்லை. என்னைத்தான் முழுவதும் கவனித்துக் கொள்ளச் சொன்னார்.

தம்புவை முன்னால் பத்து சர்வர்களோடு அனுப்பி வைத்தேன். நான் டான்னு பார்ட்டி ஆரம்பிக்கப் பத்து நிமிஷங்களுக்கு முன்னால் போனேன்.

என் டிரஸ்ஸைப் பார்த்து அசந்து போயிடுவீங்க. வெளியிலே சாதாரணமா, சினிமா, டிராமான்னு கிளம்பினா, கிளீனா, கறுப்பு டெரிலின் பாண்ட், மக்கா வெள்ளை வெளேர்னு விபார்ட்டி டெரிகாட் ஷர்ட்டை இன் பண்ணி, ஜம்னு ஒரு 'ஸோடியாக்' டை—காலில் பளபளன்னு அம்பாஸிடர் ஷூ.... பிரில்கிரீம் தெளி கிராப். புருவத்தை லேசா ஷேவ் பண்ணி அப்படிக் கொஞ்சம் டாப்லே தூக்கி 'ஜப்ரோ' பென்சிலால் ஓர் இழுப்பு.... தியேட்டர் கவுண்டர்லே அலட்சியமா ஒரு பத்து ரூபாய்த் தாளைத் தூக்கி எறிந்து 3.50 டிக்கட் ஒன்னையும் மீதிச் சில்லறையையும் நோட்டையும் எண்ணாமலே பாண்ட் பாக்கெட்டில் திணித்துக் கொள்வேன். இப்பிடி செய்யறதிலேயே ஒரு சாதாரண சர்வர்கிற இன்பீரியாரிட்டி காம்ப்ளெக்ஸைத் தூள் தூளாக்கி இந்தச் சமூகத்தையே பெரிசாப் பழி வாங்கிட்டதா எனக்கு ஒரு திருப்தி.

இன்னைக்கும் அப்படி டிரஸ் செய்து கொண்டுதான் போனேன். அவள்....மகேசுவரி.... (அப்புறம் அவள் பெயரைத் தெரிந்து கொண்டேன்) பச்சை நைலக்ஸில் தென்றலாய் உலவிக் கொண்டிருந்தாள். என்னை, என் டிரஸ்ஸைப் பார்த்து அசந்திருக்க வேண்டும் அவள்...... ''ஓ! யு லுக் நைஸ்'' என்றபடி புன்னகை செய்தாள். பார்ட்டி ஆரம்பமாயிற்று. எல்லோரும் டீ சாப்பிட்ட பிறகு அருகிலிருந்த ஹாலுக்குப் போனார்கள். அங்கு ஏதோ கலை விழா.

ஓ.... இந்த டிரஸ் எப்படிக் கட்டுப்படியாகிறது என்று..... ஆமாம்....ஆமாம்.... ஆரம்பத்திலேயே, பார்ட்லி பவுடர், பிரில்கிரீமுக்குக் கணக்குக் கேட்டீர்கள் இல்லையா?.......?

மனுஷன் தன் விரலுக்கு மேலே வீங்கினான்னு.... சில அட்ஜஸ்ட்மெண்டுகளைப் பண்ணித்தான் தீரணும். இதெல்லாம் என் முதலாளிக்குத் தெரிஞ்சா துரோகம் என்பார். சக தொழிலாளிங்க என்னை அயோக்கியன்னு திட்டுவாளுங்க. இதெல்லாம் பார்த்தா நடக்குமா? ஏன்.... இந்த முதலாளி மாத்திரம் என்ன.... யாருக்குப் பயந்து நாலு கணக்குப் புஸ்தகம் வெச்சுக்கிட்டு இருக்காரு? கல்லாப் பொட்டிக்கு நேரா வரிசையா, வேங்கடாசலபதி, லக்ஷ்மி, சரஸ்வதி, யாம் இருக்கப் பயமேன் முருகர், பிள்ளையார், ஐயப்பசாமி இன்னும் எத்தனையோ சாமிப் படங்களை வரிசையா வைச்சுக்கிட்டு, செவ்வாய் வெள்ளி தவறாம சாம்பிராணி காட்டுகிறாரே..... அவரு அந்தச் சாமிகளுக்கெல்லாம் பயந்திருந்தா அந்த மாதிரி நாலு கணக்குப் புஸ்தகம் வைச்சுப்பாரா? அதான் நானும் பார்த்தேன். அவரு அவர் அளவிலே பண்றார்.... நாம்ப நம்ப அளவிலே பண்றோம்......

விஷயம் இதுதான். கொஞ்சம் கொஞ்சமா நம்ப காலேஜ் குமரிங்களோடே ஓர் அக்ரிமெண்டுக்கு வந்தேன். அவுங்க எவ்வளவு ரூபாய்க்குச் சாப்பிட்டாலும் அதுலே ⅓க்குப் பில் போடுவேன். என் கையிலே ⅓ துட்டைக் கொடுத்துட வேண்டியது. மீதி ⅓ அவுங்களுக்கு ப்ரீ! எப்பிடிப் பிளான்! எவன் அப்பன் வீட்டுச் சொத்து....ஒரு கன்னி ஆறு ரூபாய்க்குச் சாப்பிட்டாங்கன்னு இரண்டு ரூபாய் பில்லு. இரண்டு ரூபாய் எனக்கு, மீதி இரண்டு ரூபாய் முதலாளியோடே தர்மக் கணக்கு! எப்பிடி? முதல்லே எனக்கு என்னவோ மாதிரி இருந்திச்சு.... நல்ல அமாவாசையாப் பார்த்துக்

தான் ஆரம்பிச்சேன். அப்புறமா எல்லாம் சரியாயிடுச்சு. ஆனா ஸ்வீட் ஸ்டாலுக்கு மேலே தனியாப் பொக்கை வாயைக் காட்டிக் கிட்டுச் சிரிச்சுக்கிட்டேயிருக்கிற காந்தி மாத்திரம், என்னைப் பார்த்து, என் அட்ஜஸ்ட்மெண்டைப் பார்த்துச் சிரிக்கிற மாதிரி எனக்குப் படும். சும்மா முதல் நாளைக்கு மட்டும்தான். அப்புறம் பழக்கமாயிடுச்சு. நல்லாச் சிரிச்சுக்கிட்டே இருய்யான்னு விட்டுட்டேன்.

இப்ப புரியுதா என் டிரஸ்ஸின் ரகசியம்...

இது எல்லாமே தாற்காலிகம்தானே சார். இருக்கிற இருப்பிலே மகேசுவரிக்கு என் மேலே ரொம்ப இஷ்டம்னுதான் படுது. ஒரு மாதிரியா, அவளை மாரியேஜ் பண்ணிக்கிட்டா.....அவ ஏதாவது ஒரு பெரிய பிஸினஸ்மேனுக்குப் பெண்ணாத்தான் இருப்பா. கல்யாணத்துக்கப்புறம் ஏதாவது தனியாவே பிஸினஸ் ஆரம்பிச்சாலும் ஆரம்பிச்சிடுவேன். அதுவரைக்கும் இப்படி ஏதாவது வேஷம் போட்டுத்தானே சார் ஆகணும்...?

அன்று மத்தியானம் டிபன் கோஷ்டியில் அவள் - மகேசுவரியைக் காணவில்லை. வரவில்லை. ஏன் வரவில்லை? யாரைக் கேட்பது?

மாலை மணி 3-30. அவசரம் அவசரமாய்ச் சந்தன சோப்பால் முகத்தைக் கழுவிக் கொண்டு, பார்ட்லியால் முகத்தை அப்பிக் கொண்டு, டிரஸ் செய்து கொண்டு, தம்பு விடம் சொல்லிவிட்டு கம்பெனியின் பின்புறமாய்க் கிளம்புகிறேன். திடீரென்று ஒரு யோசனை.... ஸ்வீட் ஸ்டாலைத் திறந்து புது ஸ்வீட்டாய் நாலைந்து எடுத்து அழகாய் 'பேக்' பண்ணிக் கொள்கிறேன். மேலே பொக்கை வாய் சிரிக்கிறது.

வேகமாய் நடந்து, கல்லூரியில் நுழைந்து, அலுவலகத்தைக் கடந்து விரைகிறேன்.

ஆ... அதோ... கல்லூரியின் பின்புறமிருக்கும் விளையாட்டு மைதானத்தைத் தாண்டி மெல்ல அன்னமாய் நடந்து போகும் அவள்... அவளேதான்.... என் மகேசுவரியை எனக்குத் தெரியாதா ? காற்றாய் விரைகிறேன்.

ஓ ! அந்தப் பின்னழகு.... சொக்கத் தங்கமாய்ச் சுடர் விடும் பாதங்களின் பின்புறம்...

''மிஸ் மகேசுவரி.''

அதிரியமாய்க் கூப்பிட்டு விடுகிறேன். 'மிஸ்'ஸை மிஸ் பண்ணத் தைரியமில்லை.

''மிஸ் மகேசுவரி.... உங்களுக்கு என்ன கோபம் ? நீங்கள் இன்று மத்தியானம் வேறு லஞ்சுக்கு வரவில்லை...''

அவள் பதிலே பேசவில்லை...

''அன்று விரும்பிச் சாப்பிட்டீர்களே பாதுஷா.... இன்று உங்களுக்காக ஸ்பெஷலாய்.....'' என்றபடி அவள் முன் ஸ்வீட் பொட்டலத்தை நீட்டுகிறேன்.

''ஓ ! எனக்குப் பிடிக்கும் என்று நாராயணய்யர் சொத்தான இவற்றைத் தாராளமாய் எடுத்து வந்து விட்டீர்களா ?''

நாராயணய்யர் எங்கள் கம்பெனியின் உரிமையாளர்.

''மகேசுவரி, நீங்கள் சொல்வது....''

''புரியவில்லையாக்கும். எனக்கு எல்லாம் தெரியும். இன்று மத்தியானம்தான் அவர்கள்—அதான், ஹோட்டல் புரொப்ரைட்டரைக் கூட்டாகக் கொள்ளையடிக்கும் உங்கள் பார்ட்னர்ஸ் — என் தோழிகள் — சொன்னார்கள். உங்களுக்குள் என்ன அக்ரிமெண்ட் இருக்கிறது என்று......''

''மிஸ் மகேசுவரி....'' தடுமாறுகிறேன்.

''போதாதீர்கள், உங்கள் அலங்காரங்கள், ஆடை அட்டூழியங்கள் எல்லாவற்றுக்குமே அஸ்திவாரம் எங்கே என்று எனக்குப் புரிகிறது. உங்களை முதன் முதல் நாடகத்தில் பார்த்தபோது உங்கள் நடிப்பு என்னைக் கவர்ந்தது உண்மைதான்.... பின்பு உங்கள் பண்பான பேச்சு உரம் இட்டதும் உண்மைதான்.

''நீங்க ஒரு சர்வர்னு தெரிஞ்சதும் ரொம்ப சந்தோஷப்பட்டேன். ஏன் தெரியுமா! என் அம்மா நாலு வீடுகளுக்குச் சமைத்துப் போடும் ஒரு சாதாரண சமையல்கார அம்மாள். அது தெரியுமா உங்களுக்கு? என் தகுதிக்குச் சரியானவர்தாம் நீங்கள் என்று ரொம்ப சந்தோஷப்பட்டேன். உங்க புரொப்ரைட்டர் நாராயணய்யர்தான் என்னை அவசியம் கல்லூரியில் படிக்க வேண்டும் என்று வற்புறுத்தி என்னைச் சேர்த்துப் பணமும் கட்டிப் படிக்க வைக்கிறார் தெரியுமா ?''

''ம.... மகேசுவரி.....''

''இன்று நகரத்தில் நாலு கிளைகளுடன் பிரமாதமாய் இருக்கும் அவர் அன்று, முப்பது வருஷங்களுக்கு முன்னால் எப்படி இருந்தார் தெரியுமா ? சர்வராகத்தான் இருந்தார். இன்றைய அவருடைய முன்னேற்றத்துக்குக் காரணம் — நிச்சயம் உங்கள் 'மேக்கப்' இல்லை.... எந்தத் தொழிலுக்கும் அதற்கு என்று தனி அந்தஸ்து எதுவும் கிடையாது சார்...... அதைச் செய்கிற தனிப்பட்ட நபரோட உயர்ந்த நாணயம்தான் அந்தத் தொழிலுக்கே மெருகூட்டுகிறது. காலேஜிலே லெக்சர் பண்றாப்போல உங்களுக்கு நான் ஒண்ணும் சொல்ல வரல்லே.... ஆனா... தயவுசெய்து என்னை மறந்துடுங்க.... செய்யும் தொழிலை மதிக்காத உங்களை நானும் மறந்துடறேன். ஐயாம் டிஸப்பாயிண்டட் இன் யூ..... ப்ளீஸ்.... வழியை விடுங்க.....''

அவள் போய்விட்டாள்.... தூரத்தே கரும் புள்ளியாய் மறையும் வரையில் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுக் கனத்த இதயத்தோடு ஹோட்டலுக்குள் நுழைகிறேன். ஸ்வீட் ஸ்டால் காந்தி பொக்கை வாயைத் திறந்து சிரித்துக் கொண்டிருக்கிறார்!

## குடும்ப நாடகம்

பொழுதே போகவில்லை என்று வீட்டில் இலர் அலுத்துக் கொள்கிறார்களா? அப்படியானால் ஒரு சிறிய நாடகத்தை எடுத்து உரக்கப் படியுங்கள். யார் யாருக்கு எந்தப் பாத்திரம் கொடுக்கலாம் என்று நிர்ணயியுங்கள். யார் யாருக்கு நடிப்புத் திறமை இருக்கிறதோ. பரிசீலித்துப் பாருங்கள். நேரம் போவது தெரியாது. நாடகம் ஒரு பக்கம். இலக்கிய ஆர்வம் வளர்வது இன்னொரு பக்கம். யார் கண்டது. ஒருவேளை உங்களுக்கு உண்மையாகவே நடிப்புத் திறன் இருந்தாலும் இருக்கலாம்! -சி. எஸ்.

# உங்கள் கேசம் உதிரத் தொடங்கினால் அல்லது பொடுகு விழுந்தால்

## அதை உடனே நிறுத்துங்கள்!

உற்ற தருணத்தில் கவனித்தால், கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கலாம் என்று ஆழ்ந்த பரிசோதனைகள் நிரூபித்துள்ளன.

**கேசம் உதிரக் காரணம்**

கேசத்தின் ஆரோக்கியம் அதன் வேர்களை— மயிர்க்கால்களை-பொறுத்துள்ளது. வேர்களுக்கு அருகிலுள்ள பாகங்கள் உயிரற்றுப் போனாலும், ரத்தஓட்டம் இன்றிலும் வேர்களுக்கு அவசியமான ஊட்டம் கிடைப்பதில்லை.




அடிக்கடி கேசத்தை சீவினாலும், சோப் போட்டுக் கழுவினாலும், கேசம் பெருமளவில் உதிருகின்றது. கேசம் உதிர்வதற்கு இதுவே அறிகுறி.

**ஆபத்தான பொடுகு விழாமல் காத்துக் கொள்ளுங்கள்:**

பொடுகு விழுவதைப் புறக்கணிப்பதால்தான் கேசம் உதிரத் தொடங்குகிறது.

**கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்கப்பயனுள்ள வழி**

20 ஆண்டுகளுக்கும் மேலாக எ.ப். ஹாப்மன்லா ஆய்வுக்கூடத்தில் ஆழ்ந்த ஆராய்ச்சிகள் நடத்தி, பாந்தினால் என்னும் ஓர் அற்புதமான ஊட்டப் பொருள் கண்டுபிடித்துள்ளார்கள். அந்த ஊட்டப் பொருள் உயிரற்ற செல்களுக்குப் புத்துயிரூட்டுகிறது. இந்த பாந்தினால் கொண்ட பான்டீன் விரைவிலேயே மேலை நாடுகளில் உச்ச விற்பனையுள்ள கேச டானிக்காக விளங்கி விட்டது.

பாந்தினால் கொண்ட பான்டீன் அவசியமான எல்லா மூன்று பாகங்களிலும் செயல் புரிகிறது. (அ) வேர்களின் அருகிலுள்ள பாகத்துக்குப் புத்துயிரூட்டி, போஷாக்கு அளிக்கிறது. இதனால் கேசம் உதிர்வது நின்று விடுகிறது. (ஆ) மண்டைத் தோலை சுத்தம் செய்கிறது; நோய்க் கிருமிகளைக் கொல்லுகிறது; கேசம் உதிர்வதைத் தடுக்கிறது. (இ) மயிர்க்கால்களுக்குப் புத்துயிரளித்து, கேசத்திற்குப் பளபளப்பூட்டுகிறது.

மண்டைத் தோல்
கேசம்
மயிர்க் கால்கள்
பான்டீன் புரியும் செயல்!

**பான்டீனின் வெற்றியின் இரகசியம்- நாள்தோறும் உபயோகியுங்கள்**

பான்டீன், மற்ற சாதாரண டானிக்குகளைப் போலன்றி, இலேசாகவும் பிசுக்கற்றும் உள்ளது. இது மண்டைத் தோலுக்கு அடியில் இறங்கி செயலாற்றுகிறது. இதனால் மயிர்க்கால்களுக்கு ஊட்டம் கிடைக்கிறது.

கேசம் உதிர்வதையும் பொடுகு விழுவதையும் தடுக்க சிறந்த வழி, நாள்தோறும் பான்டீன் உபயோகிப்பது.

**பான்டீன்—கேசத்திற்கு அவசியமான டானிக், உன்னத அலங்கார சாதனம்**

பான்டீன் ஒன்றுதான் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட கேச டானிக். இது கேசத்திற்கு ஊட்டமளிப்பதோடு, உலகின் பிரபல கேச அலங்கார சாதனங்களில் ஒன்றாகவும் விளங்குகிறது. பான்டீன் உபயோகியுங்கள்; கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்.




# பான்டீன் கேசத்திற்கு

ஸ்விட்ஜர்லாந்தின் வைட்டமின் ஃபார்முலா-இந்தியாவில் கிடைக்கிறது.

பிசுக்கற்ற 'எண்ணை கொண்ட ஃபார்முலா

Creative Unit-436



# இலக்கிய மலர்கள்



மீ. ப. சோமு

## 17. மனமாகிற வண்டு !

மலர்களிலே கொன்றை மலருக்கு ஒரு தனியான அழகு! அதன் நிறம் தங்க நிறம். பொன்கொன்றை என்றே பெயர். இந்தப் பூவில் தேன் அதிகமாக இருக்கும். வண்டுகளுக்குக் கொன்றைப் பூ என்றால் ஒரே கொண்டாட்டம் !

''பொன்னார் மேனிய''னை தங்கநிறத்துச் சிவபெருமான் தன் செஞ்சடையிலே இந்தப் பொன் வண்ணத்து நன்மலரை விரும்பிச் சூடிக் கொண்டிருக்கிறானாம்! என்ன அழகு, என்ன அழகு !

அந்தப் பொன் கொன்றைப் பூவுக்குள்ளே ஒரு பொன் வண்டு புகுந்தால் என்ன பாடு படும் அது ! பக்தனை, மெய்யன்பனை, வண்டாகவே பார்க்கிறார் ஒரு பழைய கவிஞர். அவர் பேர் முதலிய வரலாறு தெரியாத அந்தப் பழைய காலத்துப் புலவர் அவர்.

சுற்றிச் சுற்றி வருகிறது வண்டு. பொன் கொன்றை மலரை ! பூவினுடைய தங்க மஞ்சள் நிறம் வண்டின் கண்ணைக் கவர்கிறது. அப்படியே பாடிக் கொண்டு அந்த வண்டானது மலரைச் சூழ்ந்து சூழ்ந்து சுற்றுகிறது. கோயிலிலே பிராகாரம் சுற்றுவது போல!

**சூழ்ந்து முரன்று, அணவி**

[சூழ்ந்து — அந்த மலரைச் சுற்றிச் சுற்றி. முரன்று — ரீங்காரம் செய்து. அணவி — அந்தப்பூவின்மேல் விழுந்து அணைந்துபுரண்டு.]

பொன் கொன்றையிலே அந்த வண்டுக்குள்ள வெறியை மேலும் படம் பிடிக்கிறார் கவிஞர்.

**வாசம் துதைந்து ஆடி**

[துதைந்து — அப்பி. ஆடி — மேலும் மேலும் இதழ்களிலே குதித்து விளையாடி.]

மலரின் மேலும் மலருக்கு உள்ளும் நுழைந்தும் வெளிவந்தும், தண்ணீருக்குள் முங்கி முங்கி எழுவது போல் பூவினோடு லீலை செய்கிறது வண்டு !

**தாழ்ந்து மதுநுகர்ந்து**
**தாது அருந்தும்**

[தாழ்ந்து — உட்புகுந்து. மது நுகர்ந்து — தேனை ருசி பார்த்து உண்டு: நுகர்ந்து என்றால் சுவைத்துச் சுவைத்துச் சாப்பிட்டு. தாது அருந்தும் — மகரந்தத்தை உட்கொள்ளும்.

பொன்கொன்றை மலரோடு வண்டு தனது மோக வெறியை அப்படியெல்லாம் தீர்த்துக் கொள்ளுகிறது ! எங்குள்ளது அம்மலர் ?

**பைங் கொன்றை**
**வாசத்தார் நீங்காத**
**வண்டு.**





திருநெல்வேலி வண்ணார்பேட்டையில் சாலைத் தெருவில் ரசிகமணி டி. கே. சி. அவர்களின் இல்லத்தில் ஒரு வட்டத் தொட்டி உண்டு. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் திருநெல்வேலியிலுள்ள இலக்கிய ரசிகர்கள் இந்த வட்டத்தொட்டியில் மாலையில் ஒன்றுகூடுவார்கள். கம்பராமாயண ஆராய்ச்சியும், இலக்கிய சர்ச்சையும் இந்த 'வட்டத்தொட்டி'யில் வாரந்தோறும் நடக்கும் வைபவங்கள். ரசிகமணி மறைவுக்குப் பிறகு தற்போது அந்த வட்டத் தொட்டியின் மறு பதிப்பாக, சென்னையில் ரசிகமணியின் பெயரில் "வட்டத் தொட்டி" ஒன்று தொடங்கியுள்ளது. இலக்கியகர்த்தர்களும் ரசிகர்களும் பங்கு பற்றும் இதை உற்சாகமாகத் தொடர்ந்து நடத்த முன்வந்திருக்கிறார் ஸ்ரீமதி ராஜேஸ்வரி நடராஜன்.

இந்திய ராஷ்டிரபதி தமிழக விஜயத்தின் போது சென்னை கிண்டி இன்ஜினீரிங் கல்லூரியிலுள்ள விவேகானந்தா அரங்கில் இந்திய இன்ஜினீயர்கள் கழகத்தின் 53வது ஆண்டு மகாநாட்டைத் தொடங்கிவைத்தார். இம் மகாநாட்டில் இந்திய இன்ஜினீயர்கள் கழகத்தின் புதிய தலைவராகத் திரு எம். கணபதி பொறுப்பேற்றார். ராஷ்டிரபதி 1972ம் வருஷத்துக்கான டிசைன் பரிசை டாட்டா எலெக்டிரானிக் கம்பெனிகளின் துணை டைரக்டர் திரு கே. எம். சின்னப்பாவுக்கு வழங்கினார். தொழில் நுணுக்கக் கட்டுரைகளை இன்ஸ்டிட்யூட் பத்திரிகையில் எழுதியுள்ள தலைசிறந்த முப்பது கட்டுரை ஆசிரியர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.



[தார் — மாலை. வாசத்தார் — வாசனை பொருந்திய மணமாலை !]

பசிய, அப்போது மலர்ந்த, கொன்றைப் பூவினால் தொடுக்கப்பட்ட மண மாலையை, நீங்காது வளைத்து வளைத்துப் பறந்து கொண்டிருக்கிற அந்த வண்டு !

அந்தப் பூமாலை சிறப்பு மிகுந்த கொன்றைப் பூ மாலைதான். ஆனால் அதையும் விட ஒரு தனிச் சிறப்பு அதற்கு உண்டு. அந்த மணமாலையானது,

**…… பரஞ்சுடரின் பைங்கொன்றை**
**வாசத்தார்**

பரஞ்சுடராகிய பரமசிவனை அலங்கரிக்கிற கொன்றை மாலை அது ! எப்படிப்பட்ட பரஞ்சுடர் அவன் ?

**…… வீழ்ந்து எழுந்த**
**பாசத்தார் நீங்காப்**
**பரஞ்சுடர்**

விழுந்து எழுந்து வணங்கி நின்ற பக்தர்கள் (பாசத்தார்கள்) எம்பெருமானுடைய சந்நிதியை விட்டு நீங்க முடியாமல் அப்படியே அங்கேயே பிணைப்புண்டு நிற்கிறார்கள். பக்தியாகிய பாசத்தில் மெய்யன்பர்கள் கட்டுண்டு நிற்கிற சந்நிதியிலே, எம்பெருமானுடைய கொன்றைப்பூ மாலையிலே போய் ஒரு வண்டானது அமுத வெறியிலே சிக்கிச் சுற்றுகிறது, சுழல்கிறது. மகரந்தத்தை உண்ணுகிறது. அங்கு, இங்கு, வேறெங்கும் செல்ல முடியாமல் அப்படியே சிக்கி மயங்கிக் கிடக்கிறது அந்த வண்டு, கொன்றைப் பூவிலே ! பக்தி என்பது இதுதானே !

ஆம்; பக்தனுடைய, மெய்யன்பனுடைய உள்ளமும் அப்படித்தான் ! அந்த வண்டினுடைய ஈடுபாடும் வெறியுமே பக்தனுடைய ஈடுபாடும் வெறியும் ! அந்தப் பக்திக்கு, அந்தப் பேரன்புக்கு உருவகமாகவே வண்டின் நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது இந்தப் பழம் பெரும் பாடல் ! பக்தனுடைய மனமாகிற வண்டு பக்தி என்ற பேரானந்த வெறியிலே இறைவனை அனுபவிக்கிற பேரின்ப நிலை அப்படி இருக்கிறது !

**சூழ்ந்து முரன்றணவி**
**வாசந் துதைந்தாடித்**
**தாழ்ந்து மதுநுகர்ந்து**
**தாதருந்தும் — வீழ்ந்தெழுந்த**
**பாசத்தார் நீங்காப்**
**பரஞ்சுடரின் பைங்கொன்றை**
**வாசத்தார் நீங்காத**
**வண்டு !**

பக்திக்கு இலக்கணம் என்ன என்று வரைந்து காட்டுகிற ஓர் இலக்கியமாகவே இருக்கிறது பாடல். தேன் நிரம்பி மணம் கமழ்கிற அழகான ஒரு பொன் கொன்றை பூவே இந்த இலக்கிய மலர் ! பாட்டுக்குள் வண்டின் ரீங்காரமே கேட்கிறது!

# ஹென்னல்

## மீண்டும் கிடைக்கிறது

**வெகுகாலமாகவே அமோகமாக விற்பனையாகி வரும் கேசத்தை கருமையாக்கும் சாதனம். உங்கள் கேசத்தை இயற்கையான மற்றும் நிரந்தரமான கருமையுடனும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறது.**

உடல்நலக் குறைவினால் ஏற்படும் இளமை நரையைப்பற்றியோ, அல்லது வயோதிகத்தில் ஏற்படும் நரையைப்பற்றியோ கவலையடைய வேண்டாம். **ஹென்னல்** தற்போது உங்களுக்கு மீண்டும் கிடைக்கிறது. அது உங்களது கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிப்பதுடன், பூரண ஆரோக்கியத்துடன் இளமையான தோற்றத்தை அளிக்கிறது.

கேசத்தின் அடி வேர்களுக்கு போஷாக்கு அளித்து, செழிப்பாக வளரவும், காலக்கிரமத்தில் கேசம் இயற்கையான கருமையுடன் கூடியதாக இருக்க உதவுமாறும், அனேக பொருட்கள் சேர்ந்து தயாரிக்கப்படுவது **ஹென்னல்.**

சாதாரணமாக கடைகளில் கிடைக்கும், கேசத்தை கருமையாக்கும் இதர சரக்குகளை போல அல்ல, **ஹென்னல்.** இது தனித்தன்மை வாய்ந்தது.

1. நிரந்தரமாக நரையை தடுப்பதுடன்; உங்களைப் பல வருடங்கள் இளமையான தோற்றத்துடன் விளங்கச் செய்கிறது.

2. இயற்கையான கருமையுடன் செழிப்பாக புது கேசம் வளர உதவுவதோடு, அதை வலுவடையவும் செய்கிறது.

**ஹென்னல் உபயோகிக்கும் முறை :**

**ஹென்னலில்** உள்ள, கேசத்துக்கு போஷாக்கு அளிக்கும் சத்துக்கள் கேசத்தின் வேர்க்கால்களில் நன்கு ஊறி, கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிக்க வேண்டி, போதிய கால அவகாசம் அளிக்க வேண்டும். மூன்று மாத காலம் போதுமானது. இந்தக் கால கெடுவில் கேசம் இயற்கையான கருமை நிறத்தை அடைகிறது. **ஹென்னல்,** கேசத்தை கருமையடையச் செய்வது மட்டுமல்ல, அது கேசத்திற்கு போஷாக்கும் அளிக்கிறது; கேசத்தை அழகுறச் செய்ய மிகவும் முக்கியமான சாதனம்.

**ஹென்னலை** உபயோகிக்க ஆரம்பித்த ஒரு சில வாரங்களிலே ஒரு புதிய மாறுதலைக் காண்பீர்கள். இதற்கு முன்பு காணப்படாத ஒரு பளபளப்புடன் உங்களது கேசம் பிரகாசிக்கும். உங்களது நண்பர்கள் உங்களைக் கண்டு பிரமித்துப் போவார்கள். உங்கள் தன்னம்பிக்கையின் சக்தி வளர்ந்து பல மனிதர்களையும், விஷயங்களையும் நிர்வகிக்கும் திறமையைப் பெறுவீர்கள். எவ்வளவு வயது அடைந்தவராக இருப்பினும், **ஹென்னல்** கைவசமிருந்தால் கவலை வேண்டாம். உங்களது தொழிலில் மற்றும் சமூகத்தில் வெற்றி வாய்ப்பு நிச்சயம்.

உங்களது கேசம் தொடர்ந்து கருமையாக இருக்க **ஹென்னலை** வழக்கமாக உபயோகியுங்கள். நீங்கள் தேர்ந்து எடுக்க மூன்று ரக **ஹென்னல்** உள்ளன. **ஹென்னல்** (எண்ணெய்) **ஹென்னல்** (பசையற்றது) **ஹென்னல்** பொமேட் இந்த மூன்று ரகங்களும், யாவருக்கும் ஏற்றவாறு, வாசனை சேர்க்கப்பட்டுள்ளது. **ஹென்னல்** (எண்ணெய்) வறட்சியான, மற்றும் குத்திட்ட கேசத்திற்கு விசேஷமாக ஏற்றது. நீண்டகால நரைக்கு நல்ல பலனளிக்கக் கூடியது **ஹென்னல்** பொமேட்.

நல்ல பயனை அடைய தலையை சுத்தமாகக் கழுவ வேண்டும். வாரம் இருமுறை பியர்லைன் பாரிஸின் விசேஷ தயாரிப்பான **சில்கோ ஹேர் ஷாம்பு** போட்டுத் தலையை சுத்தம் செய்யுங்கள்.

இன்றே **ஹென்னல்** வாங்குங்கள். வருங்காலத்தில் இளமையுடன் விளங்குவீர்கள்.

**தயவுசெய்து கடிதப் போக்குவரத்தை ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளவும்**

**ஹென்னல் தயாரித்து வெளியிடுபவர்கள் :**

**பியர்லைன் - பாரிஸ் பிரைவேட் லிமிடெட், தபால் பெட்டி எண். 493, பம்பாய்-1**

**Pearline - Paris Private Limited, P. O. Box 493, Bombay -1**



# பஞ்சாபிக் கதை

ஏறக்குறைய நள்ளிரவு வேளைக்கு ரசனு கனவு கண்டான், அவன் கால்களில் பாம்பு கடித்து விட்டாற்போல.

அவன் துணுக்குற்றுவிழித்துக் கொண்டான். எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

விளக்கைப் பொருத்தினான். காலைத் தடவிப் பார்த்தான். படுக்கையை உதறினான். ஆனால் அதுவோ வெறுங் கனவு.

ஒருவேளை முதல் நாள் நிகழ்ச்சி அவனுக்கு நினைவு வந்திருக்க வேண்டும். சினிமாவுக்குப் போகும்பொழுது அவள் ஒரு மலரைப் பறித்துத் தன் கொண்டையில் செருகிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் தாயார் சொன்னாள்: ''காலை மாலைக் கருக்கலில் பூச்செடிகளில் கை வைக்காதே. ஆவணி மாதம் பாரு! செடிகளில் பூச்சி — பொட்டு இருக்கலாம்!''

'ஆவணி மாதத்தில் மழை பொழிகிறது. மலர்கள் மலர்கின்றன செடிகளில்; தாவர

# விஷக்கடி வேளை

தலீப் கௌர் டிவாணா பஞ்சாபிப் பெண் எழுத்தாளர்களுள் புகழ்பெற்ற சிறுகதை ஆசிரியர், நாவல் துறையிலும் நற்பெயர் சம்பாதித்தவர். பெண் இதயத்தையும் காதல் நுணுக்கத்தையும் நறம்படச் சித்திரிப்பதில் வல்லவர். நாஷனல் புக் டிரஸ்ட் பாரதத்தின மொழிகளனைத்திலும் வெளியிடும் 'கதா பஞ்சாப்' என்னும் தொகுப்பிலிருந்து எடுத்த கதை. இக் கதையின் நாயகியை வண்ண ஓவியமாகச் சித்திரித்து இவ்விதழ் அட்டைப்படமாக வழங்குகிறார் ஓவியர் கல்பனா. □

மனைத்தும் மகிழ்ச்சியில் மலர்கின்றது. ஊஞ்சல்கள் போடப்படுகின்றன. அப்பம் போன்ற இனிப்புக்கள் செய்யப்படுகின்றன. பண்டிகையைச் சாக்காகக் கொண்டு உடன்பிறந்தவர்கள் வந்து தங்கள் சகோதரிமார்களைப் புகுந்த வீட்டிலிருந்து பிறந்த வீட்டுக்கு அழைத்துச் செல்கிறார்கள். அப்புறம்... அப்புறம்... இதே மாதத்தில் பூச்சி பொட்டுக்களும் பாம்புகளும் நிறையத் தென்படுகின்றன' — ரசனா யோசிக்கலானாள்.

எங்கேயோ தொலைவில் நாய்கள் குரைத்துக்கொண்டிருந்தன.

இறக்கைகளை அடித்துக் கொண்டு கன்னங்கரிய பறவை ஒன்று இரவின் இருட்டிலேயே அவர்களுடைய வீட்டுக்கு மேலாகப் பறந்து போய்க் கொண்டிருந்தது.

'எனக்கு இந்தக் கெட்ட கனவு ஏன் வந்தது? பாம்பு கடித்தால் மக்கள் இறந்துகூடப் போய் விடுகிறார்களே! ஆனால் நான் இறக்க விரும்பவில்லை. எனக்கு இன்னும் சாகும் வேளை வரவில்லை!'

'சாவதற்கும் ஒரு வேளை, ஒரு பொழுது உண்டா?' — ரசனா தன்னைத் தானே கேட்டுக்கொண்டாள்.

அவள் வீட்டுக் குழாயிலிருந்து நீர் சொட்டுச் சொட்டாக விழுந்து கொண்டிருந்தது.

அவள் கவனம் மீண்டும் கனவிலேயே போய் லயித்தது.

'ஆம், வேளை-பொழுது, நேரம்-நாழிகை என்பதெல்லாம் வெளி உலகுக்கு மட்டும் இல்லை. மனத்துக்கும் உண்டு. ஒரு நேரத்தில் நமக்கு அக்கம் பக்கம் எதுவுமே தெரிவதில்லை. இன்னொரு நேரத்தில், அந்த நேரம் மலடு தட்டித் தோன்றும். பலத்த காற்று புயலென வீசும், பேயாட்டம் ஆடும். அதுவே சாகும் வேளையாக இருக்கும் அல்லவா?' ரசனா தன் மூச்சுக் காற்றில் இரவின் அழுத்தத்தை உணர்ந்தவாறே சிந்தித்தாள்.

'ஆனால் நான் இப்பொழுதே சாக விரும்பவில்லை. இந்தப்புறம் என்னுடன் அரவிந்தன் இருக்கிறான். அந்தப்புறம் எங்கள் வருங்காலம் நிற்கிறது. வழிநெடுக மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அரவிந்தன் ஒரு பூவை என் கொண்டையில் சூட்டுகிறான்.'

ஒரு மின்மினி இருளில் விளக்கு ஏந்திப் பறந்தது. 'இந்நேரம்வரையில் அது இங்கே தானே சுற்றிக் கொண்டிருந்தது? அதற்குள் இப்பொழுது எங்கே போய்விட்டது. புரியவில்லையே!'

ரசனாவுக்கு மீண்டும் கனவில் கண்ட பாம்பின் நினைவு வந்தது. 'இத்தனை பெரிய உலகத்தில் இந்தப் பாம்பு என்னைத்தான் கடிக்கணுமா? ஆனால் அதன் குற்றம் என்ன?— கடிப்பது அதன் இயல்பு... அரவிந்தனின் சுபாவம் எத்தனை நல்லது! குளிர்ந்து ஓடுகிற ஆற்று நீர் போல! ஆற்றில் வெள்ளமும் வருவதுண்டே! மக்கள் மூழ்கிச் செத்தும் விடுவதுண்டே! ஊஹூம். நான் மூழ்கிச் சாக விரும்பவில்லை.'

இருளில் உட்கார்ந்திருக்க கறுப்புப் பூனையின் கண்கள் பளிச்சிட்டன.

'இன்றைக்கு என்ன, நான் என்னென்னவோ நினைத்துக் கொண்டே போகிறேனே'- இப்படி எண்ணிய ரசனா புரண்டு படுத்துத் தூங்க முயன்றாள். ஆனால்... இன்று இந்த நேரத்தில் அவளுக்கு அரவிந்தன் ஏனோ இத்தனை நினைவு தந்து கொண்டிருந்தான்! அரவிந்தன் அவளுக்குக் கணவனாக வரப்போகிறவன். பத்து மைல் தொலைவில் உள்ள வேறு ஒரு நகரத்தில் இந்த நேரம் அவன் நன்றாக உறங்கிக் கொண்டிருப்பான்.

'யார் கண்டார்கள், அவனும் என்னைப் பற்றிக் கனவு கண்டு கொண்டிருக்கிறானோ என்னவோ?' இப்படி எண்ணி அவள் மகிழ்ச்சியில் மலர்ந்தாள்.

வானத்தில் ஊர்ந்து கொண்டிருந்த சந்திரன் இப்பொழுது அவள் வீட்டுத் தலைக்கு நேரே வந்திருந்தது.

'ஆமாம், இத்தனை வேகமாக இந்தச் சந்திரன் எங்கே போய்க் கொண்டிருக்கும்? அரவிந்தனின் நகரத்தை நோக்கியா?—' இந்த எண்ணத்தில் ரசனா மீண்டும் முறுவலித்தாள்.

அவன் எதிரே வந்தால் ரசனா இப்படி முறுவல் பூக்கிறாள் என்பதற்காக அரவிந்தன் எத்தனை முறை அவளைத் தூண்டி வேடிக்கை பார்த்திருக்கிறான்! அவள் முகத்தை எத்தனைக்கெத்தனை கம்பீரமாக வைத்துக்கொண்டாலும், அவளுக்குச் சிரிப்பு வரத்தான் செய்தது. அதுவும் அவனை வேடிக்கை பார்த்தது.

அவளுக்குத் தூக்கம் வரவில்லை. எழுந்து உட்கார்ந்து கொண்டாள். காற்றின் அசைவில் இருவாட்சியின் மணமும் கலந்து வந்தது. ரசனா நீண்ட மூச்சு இழுத்து அத்தனை மணத்தையும் தனக்குள் சேமித்துக் கொள்ள முயன்றாள்.

''இருவாட்சி மலரின் மணத்துக்குப் பாம்பு வந்துவிடும் என்று சொல்கிறார்களே! ஆமாம், இருவாட்சிச் செடியிலே பாம்பு இருக்குமாம்!''




நோய்களினால் பலஹீனமடையும் போது, உங்களுக்கு அதிக சக்தி தேவைப்படுகிறது. அதற்கு 'ஹார்லிக்ஸ்' தேவைப்படுகிறது. அது எளிதில் செரிக்கக் கூடியது. இழந்த சக்தியை மீண்டும் பெற வழி செய்து விரைவில் குணமடைய உதவுகிறது.

அதனால்தான் சுமார் 100 வருடங்களாக நோயுற்றவர்களுக்கும், அதிலிருந்து குணமடைந்து வருபவர்களுக்கும் டாக்டர்கள் 'ஹார்லிக்ஸ்' சிபாரிசு செய்து வருகின்றார்.







**முழுமையான ஊட்டம்பெற—**
**'ஹார்லிக்ஸ்'**

'ஹார்லிக்ஸ்'
பதிவு பெற்ற ட்ரேட்மார்க்

HL·5601A

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் [illegible] 45 சதம் (தபால் செலவு தனி)